Moving In or Out Any Property
Mohan Subramaniyam
Broker/President
Buy and Sell.Pro
Dir: 416-321-2300
PROPERTY MAX
HIGHER ACHIEVEMENTS
Realty Inc. Brokerage

வீடு வாங்க விற்க நட்பான சேவைக்கு
Prasath Sathiyanathan
Sales Representative
Cell: 647.296.7932
HomeLife/Future Realty Inc. Brokerage
205-7 Eastvale Dr., Markham, ON L3S 4N8
www.highspeedsales.ca

Samraj Insurance Group Inc
வாகனக் காப்புறுதி, ஆயுட்காப்புறுதி
வீட்டுக்காப்புறுதி, பயணக் காப்புறுதி
உட்பட அனைத்துக் காப்புறுதித்
தேவைகளுக்கும் அழையுங்கள்
Dr. Ananthamoorthy
416 823 3686 / 647 857 0086
1560 Brimley Rd Unit 2 - Toronto ON
M1P 3G9

வீடு வாங்க விற்க...
என் நட்பான சேவை
உங்கள் திருப்தியின் மகிழ்ச்சியே...
திரு நாகராஜா
வீடு விற்பனை முகவர்
Dir: 416-590-0090
Bus: 416-289-3333
thirunagarajah@sympatico.ca
RE/MAX
Realtron Realty Inc. Brokerage

For Real Estate and Mortgage Needs... Rely on the Experts!
PROPERTY MAX
Realty Inc. Brokerage
Sun Sanmugathas
Broker/Owner
Sell, Buy, Invest
Real Estate !
(416)-948-0693

மலர்:- 21, 19 டிசம்பர் 2014 இதழ்:- 37

# ஈழநாடு

பிரதம ஆசிரியர்: T.K.பரமேஸ்வரன் 416 841 9600

## யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக்குழுக் கூட்டத்தில் அமைச்சர் தேவானந்தாவும் அடியாட்களும் அட்டகாசம்!



யாழ்.மாவட்டச் செயலகத்தில் 16 டிசம்பர் 2014 இடம்பெற்ற மாவட்ட ஒருங்கிணைப்புக் குழுக் கூட்டத்தில் ஈபிடிபியினர் தாக்கியதில் விவசாய அமைச்சர் ஐங்கரநேசன் உள்ளிட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு மாகாணசபை உறுப்பினர்கள் நான்கு பேர் காயமடைந்தனர். இந்நிகழ்வின் போது மாவட்ட ஒருங்கிணைப்பு குழுவின் செயலாளரும் அரசாங்க அதிபருமான சுந்தரம் அருமைநாயகம் இன்றைய கூட்டத்தில் ஜனாதிபதி தேர்தல் தொடர்பாகவோ தேர்தலில் போட்டியிடும் கட்சிகள் மற்றும் வேட்பாளர்கள் (6ம் பக்கம் பார்க்க)

## போரினால் பெற்றோரை இழந்த குழந்தைகளை வாழ வையுங்கள்! உறவுகளே! ஜனவரி மாதம் உணவளிக்க முன் வாருங்கள்!

BASKARAN SINNADURAI
Broker
(416) 880-8585
Commercial
Industrial
Investment
HomeLife/GTA Realty Inc.,
Real Estate Brokerage.
5215 Finch Ave. E., #203, Toronto, ON., M1S 0C2

GT Brokers
Protect You & Your Family
Critical Illness | No medical Life
Disability Income | Mortgage Life
Travel & Visitor | Life Insurances.
RRSP | RESP
Best Insurance for the Lowest Rate !!!
Guna Thuraisingham
Independent Insurance Advisor
Dir: 416 528 1407
www.gtbrokers.ca
Super Visa Insurance
100% Refund

வீடு வாங்க விற்க
Kula S Kulamohan BBA
Sales Representative
Direct : 416-303-4801
Email : kulasunda@gmail.com
HomeLife GTA
Realty Inc. Brokerage
5215 Finch Ave. East., Suite #203,
Toronto, ON, M1S 0C2
Bus.: 416-321-6969 Fax : 416-321-6963

Cash Point
PAWN BROKERS
3852 Finch Ave. E. Unit G03, Scarborough, ON. M1T 3T9
$1000 $20/month
Tel : 416-284-7000

வீடு வாங்க, விற்க..
Kamal Navaratnam
Sales Representative
Direct: 416-303-7675
E mail:kamalhomesale@gmail.com
HomeLife/Future Realty Inc., Brokerage
205-7 Eastvale Drive, Markham ON, L3S 4N8
Bus: (905) 201-9977 Fax: (905) 201-9229
Independently Owned and Operated

Century 21
CENTURY 21 INNOVATIVE REALTY INC., BROKERAGE*
Office: 416-298-8383
Cell: 416-827-2347
Fax: 416-298-8303
JUDE GNANENDRAN
Sales Representative
Email: jude.gnanendran@century21.ca
3-2250 Markham Road, Toronto, ON., M1B 2W4
WWW.CENTURY21JUDE.COM

RBC Royal Bank
Sugan Sathiaseelan
Mobile Mortgage Specialist
416-271-7584
sugan.sathiaseelan@rbc.com
Your new home doesn't come with mortgage advice. I do.
Advice you can bank on

BUYING OR SELLING
Indra Michael Xavier
Sales Representative
Direct : 647-995-6829
indra.m.xavier@gmail.com
HomeLife/Future
Realty Inc. Brokerage*
Tel : 905-201-9977 Fax : 905-201-9229
Suite 205, 7 Eastvlae Dr. Markham, ON. L3S 4N8
*INDEPENDENTLY OWNED AND OPERATED

BUY/SELL HOUSES
ARUL THANINAYAGAM
Sales Representative
Direct : 416-624-7971 Office : 416-298-3200
Flexible Commission
HOMELIFE
TODAY REALTY LTD. BROKERAGE

AERO COURIER
LAND - AIR - SEA Fast & Secure World Wide Service
கொழும்பு-திருகோணமலை-மட்டக்களப்பு மன்னார்,
வவுனியா-கிளிநொச்சி-யாழ்ப்பாணம் கண்டி மற்றும்
இந்தியா- அவுஸ்ரேலியா ஐரோப்பிய நாடுகள்,
அனைத்து இடங்களுக்கும் உங்கள் பொதிகளை பாதுகாப்பாக
அனுப்ப வேண்டுமா? எங்களை தொடர்பு கொள்ளுங்கள்
416.292.0444
NEW OCEAN SUPER MARKET
(Inside the New Ocean Super Market)
5635 Finch Ave East Unit 2&3 Toronto On.M1B 5K9

Lovely Gold House
14 வருட சேவை
அரச அங்கீகாரம் பெற்ற அடைவுக்கடை
மிகக்குறைந்த மாதாந்த வட்டி 2% மட்டும்
We buy old jewelry for the best price
105-5215 Finch Ave E, (GTA Square)
416-834-2266

சிவா சங்கரப்பிள்ளை
முழுநேர வீடு விற்பனை முகவர்
Direct : 647-448-6464
RE/MAX Crossroads Realty Inc. Brokerage*
Office : 416.491.4002 Fax : 416.756.1267

Suthakaran Ratnam
Broker
416-722-8505
RE/MAX Crossroads Realty Inc. Brokerage*
Office : 416.491.4002 Fax : 416.756.1267
*Independently Owned and Operated
www.rsutha.com

GALAW | Gary Anandasangaree & Associates
Professional Corporation
• Real Estate • Corporate
• Commercial • Immigration
• Family • Wills & Estate
416 321 1100
galaw.ca
info@galaw.ca
10 Milner Business Court Suite 210 Toronto Ontario M1B 3C6

2.4%*
on a 5-year Close Variable rate mortgage.
www.mortgagealliance.com/ThushiThurairajah
MORTGAGE ALLIANCE
RIGHTBROKER = RIGHTMORTGAGE
Thushi Thurairajah
Mortgage Agent
Fax:1-866-700-2023
Email : tthurairajah@mortgagealliance.com
Direct: 416.735.5292
License# 10530

# வீடு வாங்கவும், விற்கவும்.......






## 11 Years Real Estate Experience

**Siva Kandiah**
Sales Representative
**Cell: 416-301-9540**
Email: skandiah@trebnet.com

**HomeLife Today**
Realty Ltd., Brokerage
Bus: 416.298.3200
Fax: 416-298-3440
31 Progress Avenue, Suite 210, Toronto, ON M1P 4S6

## www.AgentSiva.com




**Finch/Driftwood**
**$149,000**
2 Bedrooms, 2 Washrooms
Recently Renovated Unit




**Finch/ Islington**
**$189,400**
3 Bedrooms, 2 Washrooms
Fully Renovated Throughout.




**Markham/Sheppard**
**$372,000**
2+1 Bedrooms, 3 Washrooms
Upgraded Kitchen And Appliances




**Finch/Pharmacy**
**$378,000**
3 Bedrooms, 2 Washrooms
Bright End-Unit, Like A Semi Detached




**Sheppard/Markham**
**$219,900**
2+1 Bedrooms, 2 Washrooms
Brand New Kitchen, Well Maintained




**Finch & Warden**
**$239,900**
3 Bedrooms, 2 Washrooms
Recently Renovated With 2 Parking




**Hwy 401 & Mccowan**
**$229,900**
1+1 Bedrooms, 1 Washroom
Close To Ttc Bus Stop, Scarb Town Ctr




**Eglinton/Midland**
**$264,900**
2+1 Bedrooms, 2 Washrooms
Ttc At Door Steps, Shopping, Schools




**Nelison/ Sheppard**
**$529,000**
4 Bedrooms, 4 Washrooms
Sep. Entrance To Basement Apart.




**Warden/Danforth**
**$539,900**
3 Bedrooms, 3 Washrooms
Walk To Warden Subway!!




**Ellesmere Rd/Midland**
**$559,900**
4 Bedrooms, 4 Washrooms
Hardwood Floor On Main Level




**Mccowan/ Eglinton**
**$579,900**
3+2 Bedrooms, 4 Washrooms
Close To Ttc,5 Mins Walk To Go




**Brock Rd/ Dersan Street**
**$580,000**
4 Bedrooms, 3 Washrooms
Brand New Stainless Steel Appliances




**Sheppard / Meadowvale**
**$599,900**
4+1 Bedrooms, 4 Washrooms
End Unit Semi-Detached




**Mccowan Rd & Ellesmere**
**$610,000**
3+1 Bedrooms, 2 Washrooms
Fully Renovated Led Pot Lights




**Nineth Line / Reeves Way**
**$719,900**
4 Bedrooms, 3 Washrooms
2 Years Old Home, Fully Upgraded

**EELANADU**
105 DINSDALE DR
WOODBRIDGE - ON
L4H 2M4 - CANADA

416 841 9600 / 905 653 3000
eelanadu1993@ gmail.com

வாழ்க வளமுடன்! வீடு வியாபாரம் காணி வாங்கவும்
விற்கவும் மற்றும் ஆலோசனைகளுக்கும் அழையுங்கள்....

We Have Clients Waiting For You!

Want to Buy,
Sell or Rent
a Property?




HomeLife/Future Realty Inc.
205-7 Eastvale Dr. Markham, ON L3S 4N8
Brokerage*, Independently Owned and Operated*

Siva Velupillai
Cell: (416) 706 2323
Bus: 905 201 9977



Higher Standards Agents, Higher Results! More info: www.sivamhomes.com

### வாசகர்கள் வர்த்தகர்கள் கவனத்திற்கு!

எமது ஈழநாடு பத்திரிகை அலுவலகம் திங்கள் முதல் ஞாயிறு வரை வாரத்தில் ஏழ நாட்களும் காலை 9.00 மணி முதல் இரவு 12.00 மணி வரை திறந்திருக்கும். மரணஅறிவித்தல், நினைவஞ்சலி மற்றும் முக்கியமான அறிவித்தல்கள் மட்டுமே வியாழன் இரவு 12.30 மணி வரை ஏற்றுக் கொள்ளப்படும்.

உங்கள் அபிமான ஈழநாடு பத்திரிகையில் விளம்பரம், அறிவித்தல் செய்ய விரும்புவோர் அலுவலகத்துடன் (416) 841 9600 அல்லது (905) 653 - 3000 என்ற தொலைபேசியில் தொடர்பு கொண்டு விட்டு கீழ் காணும் இடங்களில் அறிவித்தல்களை ஒப்படைக்கலாம். தங்கள் ஆதரவிற்கு நன்றி.

1 SANKAR INTERNATIONAL
2425 EGLINTON AVE EAST
(EGLINTON / KENNEDY)

2 JAFFNA SUPER STORES
1221 MARKHAM RD - 14
(MARKHAM / EELESMERE)

3 NEW OCEAN SUPER MARKET
2820 MARKHAM RD
(MARKHAM / MCNICOLL)

4 AGP MART
4A WADE AVE
TORONTO

5 KALAIMAHAL BOOK DEPOT
595 PARLIAMENT ST
TORONTO

6 UTHAYA SUPER MARKET
5010 STEELES AVE WEST
ETOBICOKE

7 VIJAYAS SILK
27 DUNDAS ST WEST
MISSISSAUGA

### மொன்றியல் தொடர்புகளுக்கு
### மார்சே துர்க்கா
### (514) 276 9262

ஈழநாடு பத்திரிகையில் பிரசுரமாகும் அனைத்து அறிவித்தல்கள், விளம்பரங்களுக்கு சம்பந்தப்பட்டவர்களே பொறுப்பாளர்கள். ஈழநாடு எந்த வகையிலும் பொறுப்பேற்காது. அத்துடன் வெளிவரும் ஆக்கங்கள் அனைத்திற்கும் ஆக்கியோரே பொறுப்பாளர்கள். ஆசிரியர் அல்ல.

# பாப்பரசர் எம்முடன் இணைந்து பிரார்த்தனை செய்ய வேண்டும்
# வடமாகாணத் தமிழ் மக்கள் வேண்டுகோள்!



இலங்கைக்கான தனது விஜயத்தின் போது புனித பாப்பரசர் போரினால் பாதிக்கப்பட்ட தம்மைச் சந்தித்து தம்முடன் இணைந்து பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று வடமாகாண தமிழ் மக்கள் விருப்பம் வெளியிட்டுள்ளனர்.

புனித பாப்பரசரின் 78வது பிறந்த நாளன்று முள்ளிவாய்க்கால் பகுதிக்குச் சென்ற ஆங்கில ஊடகம் ஒன்றின் ஊடகவியலாளர் ஒருவர் அங்குள்ள பொதுமக்களை சந்தித்துக் கலந்துரையாடிய போதே அவர்கள் இந்த விருப்பத்தை வெளியிட்டுள்ளனர்.

சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தல் அடுத்த மாதம் 8ஆம் திகதி இடம் பெறவுள்ள நிலையில் ஜனவரி மாதம் 13ஆம் திகதி முதல் 15ஆம் திகதி வரை புனித பாப்பரசர் பிரான்சிஸ் இலங்கையில் பயணம் செய்யத் திட்டமிட்டுள்ளார்.

சிறிலங்காவில் ஜனாதிபதித் தேர்தல் இடம் பெறவுள்ள சூழ்நிலையில் புனித பாப்பரசரின் இலங்கைக்கான விஜயம் தொடர்பில் கிறிஸ்தவ அமைப்புகளின் ஒரு பகுதியினர் கவலை வெளியிட்டுள்ளனர்.

இந்நிலையில் இலங்கையின் நிலையான அமைதிக்காக பிரார்த்தனை செய்வதற்கு புனித பாப்பரசர் நீண்ட ஆயுளுடன் ஆரோக்கியமாக இருக்க வேண்டும் என்று வடக்கிலுள்ள தமிழ் கத்தோலிக்க மக்கள் விருப்பம் வெளியிட்டுள்ளனர்.

அத்துடன் பாப்பரசரின் விஜயத்தின் போது எவ்விதமான பதற்றங்களோ வன் முறைகளோ இடம் பெறுவதை தாம் விரும்பவில்லை என்று தமிழ் மக்கள் தெரிவித்துள்ளனர்.

வடக்கில் இன்னமும் அமைதியோ சுதந்திரமோ இல்லை என்று குறிப்பிட்ட முள்ளிவாய்க்காலில் உள்ள சில தமிழ்க் குடும்பங்கள் பாப்பரசர் போரினால் பாதிக்கப்பட்ட தம்மைச் சந்தித்து, தம்முடன் இணைந்து பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று தெரிவித்துள்ளனர். இது தமக்குப் பெரிய மகிழ்ச்சியை ஏற்படுத்தும் என்று அவரின் நலன் விரும்பிகள் தெரிவித்தனர்.

இலங்கைக்கான தனது விஜயத்தின் போது புனித பாப்பரசர் மடுத்திருத் தலத்தில் திருப்பலி ஆராதனையை நடத்தவுள்ளதுடன் போரினால் பாதிக்கப்பட்ட மக்கள் சிலரையும் சந்திக்கவுள்ளதாக ஏசியா நியூஸ் எனும் ஊடகம் தெரிவித்துள்ளது.

# புங்குடுதீவு பழைய மாணவர் சங்கத்தின் பூவரசம்பொழுது 2014 நிகழ்வில் கலந்து கொள்ள பிரபர சட்டத்தரணி தவராஜா கனடா வந்துள்ளார்







ஸ்ரீ முத்துமாரி அம்பாள் தேவஸ்தானம்

SRI MUTHUMAARI AMBAL TEMPLE

சுவாமி சோமேஸ்வரக் குருக்கள்
(பிரதம குருக்கள், தலைவர், ஜோதிடர், திருமணப் பதிவாளர்)



1314 BRITTANIA ROAD, MISSISSAUGA, ON. L4W 1C8
905-795-8389
www.ambaltemple.org

பூஜை நேரம்: காலை 9:30, மதியம் 12:00 மணி மாலை 7:00 மணி காலை 8:30 மணி 'முதல் மதியம் 12:30 மணி வரை, மாலை 6:00மணி முதல் இரவு 8:30 மணிவரை கோயில் திறந்திருக்கும். விசேட நாட்களில் நேரங்கள் மாற்றியமைக்கப்படும்.

# Home Line of Credit

upto $100,000

NO APPRAISAL FEE — FUNDED WITHIN 4-5 DAYS

# Need 2nd MORTGAGE?

YOU DECIDE HOW MUCH YOU NEED!

## BAD CREDIT? NO PROBLEM!

NO INCOME VERIFICATION — NO CREDIT CHECK

| 2nd MORTGAGE | YOU PAY BACK |
|---|---|
| $20,000 | $133/mo |
| $30,000 | $200/mo |
| $40,000 | $267/mo |
| $50,000 | $333/mo |
| $75,000 | $500/mo |
| $100,000 | $667/mo |



YOU'RE APPROVED WITHIN 24 HOURS

416.298.2777

LIC#11995. 305-5200 Finch Ave E. Scarborough, ON M1S 4Z5

ULTIMATE
MORTGAGE AND FINANCE SOLUTIONS INC.

For more information Please contact us at 416.298.2777

# தமிழ்செல்வன் படுகொலைக்கு பிரபாகரனின் பாதுகாவலர் வழங்கிய தகவல்களே காரணம் என்கிறது CIA அறிக்கை!

சிறிலங்கா படைத்தரப்பின் துல்லியமான குண்டு வீச்சில் விடுதலைப் புலிகளின் அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச் செல்வனும் ஏனைய தலைவர்களும் கொல்லப்பட்டமைக்கு வே.பிரபாகரனின் முன்னாள் மெய்ப்பாதுகாவலர் ஒருவர் வழங்கிய தகவல்களே காரணம் என்ற அமெரிக்க புலனாய்வு அமைப்பான சி.ஐ.ஏயின் இரகசிய அறிக்கை ஒன்றை விக்கிலீக்ஸ் வெளியிட்டுள்ளது.

2009ஆம் ஆண்டு ஜுலை மாதம் 7ஆம் திகதியிடப்பட்ட 21 பக்கங்களைக் கொண்ட இந்த அறிக்கையில் இலங்கை உள்ளிட்ட நாடுகளில் கிளர்ச்சி முறியடிப்பு நடவடிக்கைகளின் போது சக்தி வாய்ந்த இலக்குகளை தகர்ப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் தொடர்பான தகவல்கள் தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்த அறிக்கை அமெரிக்க புலனாய்வு அமைப்பான சி.ஐ.ஏயின் நாடுகடந்த விவகாரங்களுக்கான பிரிவினால் 'கிளர்ச்சி முறியடிப்பில் மிகச்சிறந்த நடைமுறைகள்' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளது.

ஆப்கானிஸ்தானில் (2001 - ஜூன் 2009) அல்ஜீரியாவில் (1954 - 1962) கொலம்பியாவில் (2002 - ஜூன் 2009), ஈராக்கில் (2004 - ஜூன் 2009) இஸ்ரேலில் (1972 - 1990களின் நடுப்பகுதி 1990களின் நடுப்பகுதி முதல் 2009 ஜூன் வரை) பெருவில் (1980 - 1999) வட அயர்லாந்தில் (1969 - 1998) மற்றும் இலங்கையில் (1983 - மே 2009) கிளர்ச்சி முறியடிப்பில் சக்தி வாய்ந்த இலக்குகள் தாக்கப்பட்ட விதம் தொடர்பில் இவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அத்துடன் செசன்யா, லிபியா, தாய்லாந்து மற்றும் பாகிஸ்தான் போன்ற நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் குறித்தும் சி.ஐ.ஏயின் இந்த இரகசிய அறிக்கையில் உதாரணம் காட்டப்பட்டுள்ளது.

விடுதலைப் புலிகளின் கிளர்ச்சியை முறியடிக்க அதன் தலைவர் வே.பிரபாகரன் மற்றும் அவருக்கு நம்பிக்கையானவர்களைக் கொலை செய்வதற்கு 1983ஆம் ஆண்டு முதல் 2009ஆம் ஆண்டு மே மாதம் வரையில் சிறிலங்கா அரசாங்கம் முயற்சிகளை மேற்கொண்டதாக இந்த இரகசிய அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

விடுதலைப் புலிகள் அமைப்பை மோசமானதும், மிகவும் புத்திசாதுரியம் கொண்டதுமாக அமைப்பாக குறிப்பிட்டுள்ள இவ்வறிக்கை இதனை இனத்தேசியவாத அமைப்பாகவும் சுட்டிக்காட்டியுள்ளது.

முதற்கட்ட இரகசியத் தகவல்கள் கிடைத்ததையடுத்து விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரனையும் முக்கிய தலைவர்களையும் கொல்வதற்கு சிறிலங்கா அரசாங்கம் தனது விமானப்படை மூலம் பதுங்கு குழிகளை அழிக்கும் குண்டுகளைப் பயன்படுத்தி 2007ஆம் ஆண்டு நவம்பரட மாதத்திலும் 2008ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திலும் முயற்சி செய்ததாக இந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

2007ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2ஆம் திகதி விடுதலைப் புலிகளின் அரசியல்துறைப் பொறுப்பாளர் தமிழ்ச் செல்வனும் ஏனைய தலைவர்களும் சிறிலங்கா படைத்தரப்பின் துல்லியமான



குண்டுவீச்சில் கொல்லப்பட்டமைக்கு விடுதலைப் புலிகளின் தலைவர் வே.பிரபாகரனின் முன்னாள் மெய்ப் பாதுகாவலர் ஒருவர் தரையில் இருந்து ஒருங்கிணைத்து வழங்கிய தகவல்களே காரணம் என்று இரகசிய அறிக்கை ஒன்று குறிப்பிடுவதாகவும் இந்த அறிக்கை தெரிவிவத்துள்ளது.

தலைமைத்துவம் மீதான அதிருப்தியைப் பயன்படுத்தி, முரண்பாடுகளைத் தூண்டிவிட்டு பிளவுகளை ஏற்படுத்துவதன் மூலம் சக்தி வாய்ந்த இலக்குகளை நெருங்கலாம் என்றும் இந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

கேணல் கருணாவுக்கும் விடுதலைப் புலிகளின் தலைமைக்கும் இடையில் ஏற்பட்ட முரண்பாடுகளைத் திறமையாகப் பயன்படுத்தி சிறிலங்கா அரசாங்கம் அடைந்த பலன்களையும் சி.ஐ.ஏயின் இந்த அறிக்கை உதாரணமாக சுட்டிக்காட்டியுள்ளது.

**வாசகர்களின் கவனத்திற்கு! அடுத்த வாரம் ஈழநாடு பத்திரிகை 24 டிசம்பர் 2014 புதன்கிழமை வெளிவரும் என்பதை அறியத் தருகின்றோம். அதற்கு அடுத்த இதழ் 02 ஜனவரி 2015 வெளிவரும்**

# ஐயப்பன் சுவாமிமார்கள் அன்பு இல்லக் குழந்தைகளுக்கு உணவு வழங்க முன்வந்துள்ளார்களின் விபரம் வருமாறு

கலியுகத்தில் கண் கண்ட தெய்வமாக விளங்கும் இந்தியாவில் உள்ள சபரிமலை ஐயப்பனின் மகரமண்டல விரதம் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. கனடாவிலும் பல நூறு ஐயப்ப பக்தர்கள் மாலை அணிந்து மரக மண்டல விரதம் அனுஷ்டித்து வருகின்றமை யாவரும் அறிந்த ஒன்றே.

ஐயப்பப் பெருமானுக்கு அன்னதானப் பிரபு என்ற நாமமும் உண்டு. பல அடியார்கள் தினம்தோறும். வாரம் தோறும். மாதம் தோறும் அடியார்களுக்கு அன்னதானம் வழங்கி வருகின்றமையும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாண்டு ஐயப்பன் மாலை அணிந்து விரதம் அனுஷ்டித்து வரும் சுவாமிமார்கள் சிலர் தாமாக முன் வந்து முல்லைத்தீவு மாவட்டத்தில் போரினால் பெற்றோரை இழந்த குழந்தைகளைப் பராமரிக்கும் புனிதபூமி அன்பு இல்லத்திற்கு உணவளிக்க முன்வந்துள்ளார்கள். இவ்வாறு மாலை அணிந்தவர்களில் பலர் முதன்முறையாக மாலை அணிந்த கன்னிச் சுவாமிமார்கள் ஆவார். இவர்கள் விரத நாட்களில் ஒரு நாள் ஒரு வேளை ஐயப்ப சுவாமிமார்களை அழைத்து தமது வீடுகளில் உணவளிக்க வேண்டும் என்பது மரபு. ஆனால் வீடுகளுக்குச் சுவாமிமார்களை அழைத்துச் சென்று உணவளிக்க முடியாத சுவாமிமார்கள் ஆலயங்களில் அன்னதானம் கொடுப்பது வழமையாகும். இந்நிலையிலேயே பல ஆண்டுகளாக ஐயப்பசுவாமிமார்களாக இருக்கும் சில சுவாமிமார்கள் முன் வந்து அன்பு இல்லக் குழந்தைகளுக்கு உணவளிக்கும் யோசனையைத் தெரிவித்து அதற்கு தம்மால் முடிந்தளவு நிதியினை வழங்னி வருகின்றனர்.

இந்த அன்பு இல்லத்தில் 324 குழந்தைகள் வாழ்கின்றார்கள். அவர்களுக்கு ஈழநாடு பத்திரிகை ஊடாக கடந்த மூன்றரை ஆண்டுகளாகத் தொடர்ச்சியாக கனடா வாழ் தமிழ்ச்சமூகத்தின் உதவியுடன் உணவளித்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

காலத்தின் தேவையையும் ஐயப்பனின் கடாட்சத்தையும் நினைத்து ஐயப்ப விரத நாட்களில் உணவளிக்க முன் வந்த ஐயப்ப சுவாமிமாருக்கு ஈழநாடு பத்திரிகை சார்பிலும் அன்பு இல்லக் குழந்தைகள் சார்பிலும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன் ஐயப்பனின் பேரருள் மென்மேலும் அவர்களுக்குக் கிடைக்க ஐயப்பனை இறைஞ்சுகின்றோம்.

உணவளிக்க முன் வந்த ஐயப்ப சுவாமிமார்களின் விபரம் வருமாறு

(1)திரு வாமதேவன் (வாமன்) 100.00

(2) திரு சௌந்தரராசன் (காந்தி) 100.00

(3) திரு ராம் நல்லையப்பன் 100.00

(4)திரு ஸ்ரீகாந்தன் நடராஜாசுவாமி 100.00

**(5)திரு ஐயாத்துரை இராஜலிங்கம் சுவாமி 200.00 (இவர் இவ்வாண்டு 18வது ஆண்டாக சபரிமலை ஐயப்பனைத் தரிசிக்க புனித யாத்திரை மேற்கொள்ளவுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கது.**



குழந்தைகளுக்கு உணவளிக்க விரும்பும் சுவாமிமார்கள் ஈழநாடு பரமேஸ் 416 841 9600 என்ற தொலைபேசியில் தொடர்பு கொள்ளவும். சாமியே சரணம்

**Balachandran Law Office**

**Balachandran Muthaiah**

**Barrister, Solicitor & Notary**

குடிவரவுச்சட்டம் - விசா, ஸ்பொன்சர், அகதிமனு கோரிக்கைகள்
வீடு, வர்த்தகம், அடைமான சட்டம்.
விவாகரத்து, பிரிவு உடன்படிக்கை
உயில், தத்துவபத்திரம் தயாரித்தல்.
உட்பட சகல சட்ட தேவைகளுக்கும்
பாலச்சந்திரன் சட்ட அலுவலகம்



2401 Eglinton Ave East, Suite 300
Toronto, Ontario M1K 2M5
**416 755 5544**

# யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக்குழுக் கூட்டத்தில் அத்தியடிக் குத்தியனும் அடியாட்களும் அட்டகாசம்!

**யாழ்ப்பாண மாவட்டச் செயலகத்தில் கடந்த 16 டிசம்பர் 2014 செவ்வாய்க்கிழமை இடம்பெற்ற மாவட்ட ஒருங்கிணைப்புக்குழக் கூட்டத்தில் தமிழீழத்தின் அரசவைக் கவிஞர் புதுவை இரத்தினதுரை அவர்களால் "அத்தியடிக் குத்தியன்" என்று வர்ணிக்கப்பட்டவரும் சமூகவிரோத அமைச்சருமான டக்ளஸ் தேவானந்தாவும் அவரால் வெளியில் இருந்து கொண்டு வரப்பட்ட ஈ.பி.டி.பி. குண்டர்களும் அடியாட்களும் நடாத்திய காட்டுமிராண்டித்தனத்தில் வடமாகாண விவசாய அமைச்சர் ஐங்கரநேசன் உட்பட பலர் காயமடைந்து யாழ்.வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டனர். இது தொடர்பான செய்திகளை முழுமையாகத் தொகுத்து "எந்தச் செய்தியையும் முந்தித் தரும் உங்கள் அபிமான ஈழநாடு" வாசகர்களுக்க வழங்குகின்றது.**



யாழ்.மாவட்டச் செயலகத்தில் 16 டிசம்பர் 2014 இடம்பெற்ற மாவட்ட ஒருங்கிணைப்புக் குழுக் கூட்டத்தில் ஈபிடிபியினர் தாக்கியதில் விவசாய அமைச்சர் ஐங்கரநேசன் உள்ளிட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு மாகாணசபை உறுப்பினர்கள் நான்கு பேர் காயமடைந்தனர்.

இந்நிகழ்வின் போது மாவட்ட ஒருங்கிணைப்பு குழுவின் செயலாளரும் அரசாங்க அதிபருமான சுந்தரம் அருமைநாயகம் இன்றைய கூட்டத்தில் ஜனாதிபதி தேர்தல் தொடர்பாகவோ தேர்தலில் போட்டியிடும் கட்சிகள் மற்றும் வேட்பாளர்கள் தொடர்பாகவோ பேச முடியாது என சுட்டிக்காட்டியிருந்தார். ஒருங்கிணைப்பு குழுவின் இணைத்தலைவர்களில் ஒருவரான முதலமைச்சர் சீ. வி.விக்னேஸ்வரன் தனது உரையினை நிகழ்த்தினார்.

இதன்போது இன்றேனும் இக் கூட்டம் நடை பெறுவதையிட்டு மகிழ்ச்சி அடைகின்றேன். பல தாமதங்களின் பின்னர் இன்று எம்மால் கூட்டம் கூட முடிந்துள்ளது. இன்றும் எம்மிடையே எதிர்ப்பு அரசியல் கலாசாரமே மேலோங்கி நிற்பதாக உணர்கின்றேன். எமது அரசியல் பயணமானது மக்களின் குறை தீர்க்கும் பயணமாகவே அமைய வேண்டும். அரசாங்க அமைச்சரும் நாமும் ஒன்று சேர்வது எம்முடைய தனிப்பட்ட கட்சிகளின் முன்னேற்றத்தை உறுதிப்படுத்த அல்ல.

மக்களின் பிரச்சினைகளை நாம் ஒன்று சேர்ந்தேனும் தீர்த்து வைக்கவே என்ற எண்ணம் எம் ஒவ்வொருவர் மனதிலும் மேலோங்கினால் தான் விடிவு காலம் வரும். ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்டாலும் அடிப்படையில் நாங்கள் மாறுவோமா என்ற கேள்வி பூதாகரமாக எழுந்துள்ளது. ஆனால் எம் மனோ நிலையில் மாற்றம் அவசியம் என்பதைக் கூறி வைக்கின்றேன். மத்திக்கும் மாகாணத்திற்கும் இடையில் இருக்கும் உறவு முறை இன்னமும் சரியாக ஒழுங்கு செய்யப்படவில்லை என்பதே எனது கருத்து. எனினும் தேர்தலின் பெறுபேறுகளைப் பாதிக்கும் வண்ணம் பேச வேண்டாம் என்று தேர்தல் ஆணையாளர் விடுத்த அறிக்கைக்கு அமைவாக நான் கூறவந்த சில விடயங்களை இத் தருணத்தில் தவிர்த்துக் கொள்கின்றேன். தம்மைத் தாமே தக்கவாறு பரிபாலிக்க நிர்வகிக்க பாதுகாக்க மாகாணம் எத்தனிக்கும் போது அதற்குத் தடையாக நடந்து கொள்வது வருங்காலத்தில் பாரிய விளைவுகளைக் கொண்டுவரக் கூடும் என்பதையே உங்களுக்கு இத்தருணத்தில் எடுத்துக் கூற விரும்புகின்றேன்.அரசியல் காரணங்களுக்காக வடமாகாணத் தமிழ்ப் பேசும் மக்களாகிய நாம் ஒருவருடன் ஒருவர் முட்டி மோதி முரண்பட்டுக் கொள்வது எம்மை நாமே பலவீனப் படுத்துவதாகவே அமையும். முரண்பாடுகள் அரசியல் ரீதியாக இருக்க வேண்டும். ஆனால் நாம் யாவரும் எமது மக்கள் நலன் கருதியே பயணிக்கின்றோம் என்ற எண்ணம் எம் யாவருள்ளும் மேலோங்க வேண்டும்.

இணைத் தலைவர் அவர்கள் நான் பேசி முடித்தவுடன் வழக்கமாக நான் அரசியல் பேசுவதாகவும் இது பொருளாதார ரீதியான ஒருங்கிணைப்புக் கூட்டம் என்பதையும் எமக்கு நினைவு படுத்துவார். ஆனால் நான் கூறுவது பொருளாதார ரீதியான கூட்டங்களில் கூட அரசியல் வேறுபாடுகளையும் வன்மங்களையும் உட்புகுத்தாதீர்கள் என்பதையே. வெறும் அரசியல் கட்சிகள் ரீதியான கண்ணோட்டத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டு மக்கள் நலம் சார்பான மனோ நிலையுடன் இனி வருங் காலங்களிலேனும் நாம் பயணம் செய்ய வேண்டும் என்றார்.

இதனை தொடர்ந்து பேசிய மற்றைய இணைத்தலைவரான அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா வடமாகாண சபைக்கு அரசாங்கம் பெருமளவு நிதியினை கொடுத்ததாகவும் அவர்கள் அதனை பயன்படுத்தாமல் மாகாண சபையை புழுதியில் எறிந்து விட்டதாகவும் குற்றம் சாட்டியதுடன் தொடர்ச்சியாக மாகாண சபை குறித்த விமர்சனங்களை முன்வைத்தார்.

இந்நிலையில் அமைச்சர் டக்ளஸின் விமர்சனங்களை ஒத்துக் கொள்ள மறுத்த மாகாணசபை அவைத் தலைவர் சீ.வி.கே.சிவஞானம் மற்றும் அமைச்சர் ஐங்கரநேசன், சிவாஜிலிங்கம் மற்றும் நாடாளுமன்ற உறுப்பினர் சி.சிறீதரன் ஆகியோர் சபையில் எதிர்ப்பு தெரிவித்ததுடன் அரசாங்கத்திற்கு வாக்குச் சேகரிக்கும் நடவடிக்கை இங்கே வேண்டாம் என சுட்டிக்காட்டினர்.

இதனால் சுமார் 15 நிமிடங்களுக்கும் மேலாக சபையில் குழப்பம் நிலவியது. இந்நிலையில் மீண்டும் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா தனது உரையினை தொடர்ந்த நிலையில் தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் மாகாண சபை உறுப்பினர்கள் மற்றும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் கடுமையான எதிர்ப்பு தெரிவித்தனர். இந்நிலையில் ஈ.பி.டி.பி உறுப்பினர் அந்த இடத்தில் கூட்டமைப்பு உறுப்பினர்களை தகாத தூசண வார்த்தைகளினால் திட்டித் தீர்தனர். தமது கை சேட்டுக்களை மேலே இழுத்த வண்ணம் அமைச்சரது கடைக்கண் பார்வைக்கு காத்து நின்றனர். காலை வேளையிலேயே மதுபான வாடை இவர்களில் மணத்தது.

இந்நிலையில் ஒருவாறாக அமைச்சர் டக்ளஸ் தனது உரையினை நிறைவு செய்த நிலையில் மீண்டும் அமைச்சருக்கு பதிலடி கொடுத்தார் முதலமைச்சர். அதில் குறிப்பாக திட்ட அறிக்கையும் அதன் முன்னேற்றங்களும் என்று நிகழ்ச்சி நிரலில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் அவை எதனைக் குறிப்பிடுகின்றன என்பது பற்றி எனக்குத் தெரியாது. கணனியில் இவ்வருடத்தைய நிதி சம்பந்தமான அறிக்கைகள் 30.11.2014 வரையில் தரப்பட்டுள்ளன. வருட முடிவில் அவற்றைப் பிரதி எடுத்து இங்கு கொண்டு வந்து வாசிக்க வேண்டிய அவசியம் எதுவும் எமக்கில்லை என்று கருதுகின்றேன்.

ஒன்றை மட்டும் கூறி வைக்கின்றேன். இவ்வருடம் மீண்டுவரும் செலவீனமாகத் தரப்பட்ட முழுத் தொகை – 14580 மில்லியன் ரூபாய். இது எமக்கு அபிவிருத்திக்காகத் தரப்பட்ட செலவீனம் அல்ல. அலுவலர்களுக்கான செலவீனம். அடுத்தது செயற் திட்டங்களுக்கு தரப்பட்ட தொகை 3955 மில்லியன் ரூபாய். இது அபிவிருத்திக்காகத் தரப்பட்ட தொகை என்றாலும் எங்கள் வசம் தரப்பட்ட தொகையல்ல. அதனை செலவழிப்பது, செலவு செய்யும் முறைகளை நிர்ணயிப்பது, செயற்படுத்துவது யாவுமே மத்திய அரசாங்கமே. மத்திய அரசாங்கம் மாகாண அலுவலர்களை வைத்துத் தாமேநடாத்தும் கைங்கரியந்தான் இது. எமக்கும் இப்பணத்திற்கும் எது வித சம்பந்தமுமில்லை.



அண்மையில் ஊழல் நிகழ்ந்ததும் அந்தப் பணத்தைச் செலவழிக்கையிலேயே எமக்கென மூலதனச் செலவீனம் சார்பாகத் தரப்பட்ட தொகை 1876 மில்லியன் ரூபாய். மீண்டும் மீண்டும் சகல ஊடகங்களுக்கும் நாம் கூறி வருவது இதைத்தான். எமக்கென அரசாங்கம் ஒதுக்கிய தொகை 1876 மில்லியன் ரூபாய் மட்டுமே. குறைநிரப்பு ஒதுக்கீட்டை உடன் சேர்த்து ஒக்ரோபர் மாதத்தில் கிடைத்த தொகை 2014.78 மில்லியன் ரூபாய். அத்தொகை நல்ல முறையில் செலவழிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அநேகமாக நாங்கள் அதனை முற்றிலும் உரியவாறு வருட முடிவுக்கு முன்னர் செலவழித்து விடுவோம். அதில் சந்தேகம் வேண்டாம்.மேலதிக விபரங்களை கூகுள் தரவில் பார்த்துக் கொள்ளலாம். சகல அமைச்சர்களின் விபரங்களும் அதில் தரப்பட்டுள்ளன. என்றார்.

இதனை தொடர்ந்து மீண்டும் தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் உறுப்பினர்கள் மாகாண சபை குறித்த அமைச்சர் டக்ளஸின் விமர்சனத்திற்குப் பதில் சொல்ல வேண்டும் என கூறிக் கொண்டிருந்த நிலையில் மாகாண சபை உறுப்பினர் எம்.கே.சிவாஜிலிங்கம் சபையிலிருந்த ஒலிவாங்கியை வாங்கிக் கொண்டு பேசத் தொடங்கினார். அதன் போது அமைச்சர் டக்ளஸ் மீண்டும் சிவாஜிலிங்கத்தை உட்காருமாறு கேட்டுக் கொண்டார். ஆனால் மாகாண சபை எதிர்க்கட்சி தலைவரான ஈ.பி.டி.பி தவராசா சபையில் எழுப்பி மீண்டும் மாகாணசபை குறித்து விமர்சிக்க முற்பட்டபோது அதற்கு போதுமான இடம் கொடுக்கப்பட்டது.

இந்நிலையில் சிவாஜிலிங்கம் தொடர்ந்தும் பேசுகையில் ஒரு கட்டத்தில் அவருடைய ஒலி வாங்கியை வாங்கிக் கொள்ளுங்கள் என அமைச்சர் டக்ளஸ் கூறினார்.

இதனையடுத்து டக்ளஸின் தம்பியான தயானந்தாவும் ஈ.பிடி.பி அடிவருடி ஒருவரும் சேர்ந்து சிவாஜிலிங்கத்திடமிருந்து ஒலிவாங்கியை பிடுங்க முற்பட்டனர். இந்நிலையில் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் சி.சிறீதரன் மற்றும் அமைச்சர் ஐங்கரநேசன் ஆகியோர் ஒலி வாங்கியை பிடுங்க நீங்கள் யார்? என கேட்டனர்.

அதற்குள் அவர்களும் ஏற்கனவே தயாராக நின்ற குண்டகர்களும் நாடாளுமன்ற உறுப்பினர் மற்றும் அமைச்சர் ஆகியோரின் ஆசனப் பகுதிக்குள் நுழைந்து விட்டனர். மறுபக்கம் ஈ.பி.டி.பியின் வேலணைப் பிரதேச சபை உறுப்பினர் போல் சிவராசா என்பவரும் அந்தப் பகுதிக்குள் வந்து கூட்டமைப்பின் உறுப்பினர்கள் மீது தாக்குதல் நடத்த முற்பட்டதையடுத்து எதிர்ப்பக்கத்தில் அமர்ந்திருந்த ஈ.பி.டி.பி உறுப்பினர்கள் அனைவரும் எழுந்து வந்து கூட்டமைப்பினரை சூழ்ந்து விட வெளியிலிருந்து சபைக்குள் முன்னரே கொண்டுவரப் பட்டு உட்கார வைக்கப் பட்டும் புகைப்படக் கருவிகளுடன் களமிறக்கப்பட்டிருந்தவர்களும் சேர்ந்து கூட்டமைப்பினர் மீதும் சரமாரியாக தாக்குதல் நடத்த தொடங்கினர்.

இதில் கூட்டத்தின் ஆரம்பத்தில் அமைச்சர் டக்ளஸின் உரைக்கு எதிர்ப்பு தெரிவித்த நாடாளுமன்ற உறுப்பினர் சிறீதரன் மற்றும் ஐங்கரநேசன் மற்றும் விந்தன், சர்வேஸ்வரன் சிவாஜிலிங்கம் மீது கண்மூடித்தனமாக தாக்குதலை நடத்த ஈ.பி.டி.பியினர் கடுமையான தாக்குதல் நடத்த முற்பட்டனர். ஆனாலும் அந்த முயற்சி தோல்வியில் முடிந்தது.

இதன்போது வடக்கு மாகாண விவசாய அமைச்சர் ஐங்கரநேசனை போத்தலால் (29ம் பக்கம் பார்க்க) எறிந்து

# மைத்திரிபால வெற்றி பெற்றாலும் ஆட்சியை விட்டு வெளியேற மகிந்த சகோதரர்கள் எதிர்ப்பு வெளியிடலாமென அலன்கீனன் தெரிவிப்பு




சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தலில் எதிரணியின் பொதுவேட்பாளர் மைத்திரிபால சிறிசேனா வெற்றி பெற்றாலும் ஆட்சி அதிகாரத்தை விட்டு வெளியேற சிறிலங்காவின் தற்போயைய ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவும் அவரின் சக்தி மிக்க சகோதரர்களும் எதிர்ப்பை வெளிப்படுத்தலாம் என்ற அச்சம் அதிகரித்து வருவதாக சர்வதேச நெருக்கடிக்கான குழுவின் சிறிலங்காவுக்கான ஆய்வாளர் அலன் கீனன் தெரிவித்துள்ளார்.

சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தல் அடுத்த மாதம் 8ஆம் திகதி இடம் பெறவுள்ள நிலையில் யேர்மனியை தளமாகக் கொண்ட DW எனும் ஊடகத்திற்கு வழங்கிய செவ்வியின் போதே அவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இது தொடர்பில் இச்செவ்வியில் அவர் குறிப்பிட்ட முக்கிய விடயங்களை இங்கே தொகுத்துத் தருகின்றோம்.

சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தல் நேர்மையாகவும் சுயாதீனமாகவும் இடம் பெற்றால் தற்போதைய ஆட்சி முடிவுக்கு வரும் என்பதையே பல்வேறு காரணிகளைக் கொண்டு ஊகிக்க முடிகின்றது. இந்தத் தேர்தலில் எதிரணியின் பொதுவேட்பாளர் மைத்திரிபால சிறிசேனவுக்கே அதிகளவு வாக்குகள் கிடைக்கும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

அதேவேளை சிறிலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச சிங்கள வாக்காளர்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றுள்ளார். ஒரு திறமை வாய்ந்த அரசியல்வாதியாக விளங்கும் இவர் அரசாங்க வளங்களை தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்துள்ளார்.

எதிரணியின் பொதுவேட்பாளர் மைத்திரிபால சிறிசேன ஆளுங்கட்சியிலிருந்து வெளியேறிய பின்னர் இவருடன் சிறிலங்கா சுதந்திரக் கட்சியில் அங்கம் வகித்த மூத்த உறுப்பினர்கள் சிலரும் எதிரணியுடன் இணைந்தனர். இதனைத் தொடர்ந்து சிறிலங்காவின் ஆளுங்கூட்டணியில் அங்கம் வகித்த சிங்கள இனவாதக் கட்சியான ஜாதிக ஹெல உறுமயவும் எதிரணியுடன் இணைந்தது. இது ஆளுங்கூட்டணியை பலவீனப்படுத்தியுள்ளதுடன மகிந்த ராஜபக்சவின் வெற்றியையும் பெருமளவு கேள்விக்கு உள்ளாக்கியுள்ளது.

இத்தேர்தலில் வெற்றி பெற்று ஜனாதிபதியாக பதவி ஏற்றால் 100 நாட்களில் நிறைவேற்று ஜனாதிபதி அதிகார முறைமையை ஒழித்தல் மற்றும் சுயாதீனமான ஆணைக்குழுக்களை மீண்டும் அமைக்க ஏற்பாடு செய்யப்படும் என மைத்திரிபால சிறிசேன வாக்குறுதி அளித்துள்ளார்.

இத்தேர்தலில் மைத்திரிபால சிறிசேன வெற்றி பெற்றால் நாடாளுமன்றின் மூன்றில் இரண்டு பெரும்பான்மையைப் பெற்றுக் கொள்வதில் அவர் சவால்களை எதிர்கொள்வார். இதனால் மைத்திரிபால சிறிசேனவின் சீர்திருத்த நிகழ்ச்சி நிரல் கடுமையான பிரச்சினைகளை எதிர்கொள்ள நேரிடும்.

இத்தேர்தலில் மகிந்த ராஜபக்ச வெற்றி பெற்றால் உள்நாட்டிலும் சர்வதேச ரீதியிலும் இவரது பலம் ஓங்கும். இல்லையேல் அடுத்த மார்ச் மாதம் இடம் பெறவுள்ள ஐ.நா மனிதவுரிமை ஆணைக்குழுவில் கையளிக்கப்படவுள்ள சிறிலங்கா தொடர்பான அறிக்கைக்கு இவர் முகங்கொடுக்க நேரிடலாம்.

அதேவேளை இத்தேர்தலில் போட்டியிடும் இரண்டு பிரதான வேட்பாளர்களின் தேர்தல் வாக்குறுதிகளில் தமிழர்களின் பிரச்சினைகள் தொடர்பான தீர்வு குறித்து எதுவும் தெரிவிக்கப்படவில்லை. குறிப்பாக தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் முக்கிய பிரச்சினைகள் தொடர்பில் எதிரணியினர் எவ்வித தீர்வையும் முன்வைக்கவில்லை.

மைத்திரிபால சிறிசேன சிங்கள இனவாதக் கட்சியான ஜாதிக ஹெல உறுமயவுடன் கூட்டுச் சேர்ந்துள்ளமை பெரும்பாலான தமிழ் மக்கள் மத்தியில் குழப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. அதேவேளை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு தனது ஆதரவை மைத்திரிபால சிறிசேனவுக்கு வழங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இவரை கூட்டமைப்பு அதிகாரபூர்வமாக ஆதரிக்காது விட்டாலும் மறைமுகமாக இவருக்கே தமது ஆதரவை வழங்குவார்கள்.

இத்தேர்தலில் மைத்திரிபால சிறிசேன பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றாலும் கூட சிறிலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவும் அவரது அதிகாரமிக்க சகோதரர்களும் பதவியை விட்டு வெளியேறுவதில் எதிர்ப்பைக் காண்பிப்பார்கள் என்கின்ற அச்சம் எழுந்துள்ளது. இந்தத் தேர்தலில் மைத்திரிபால சிறிசேனவும் மகிந்த ராஜபக்சவும் மிகவும் நெருக்கமான வாக்குகளைப் பெற்றால் அதிக வன்முறைகள் ஏற்படுவதற்கான ஆபத்துக்கள் உள்ளது.

மகிந்த ராஜபக்ச தனது அதிகாரத்தின் ஊடாக தான் வெற்றி பெற்றதாக அறிவித்தால் அவரின் ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்வதற்கான நடவடிக்கைகளில் படைத்தரப்பினா ஈடுபடலாம் என்கின்ற அச்சமும் வெளியிடப்பட்டுள்ளது. அத்துடன் மகிந்த ராஜபக்சவுக்கு ஆதரவு தெரிவித்துள்ள பொதுபல சேனா தேர்தலை அண்மித்தோ அல்லது அதற்குப் பின்னரோ குழப்பங்களை ஏற்படுத்த முனையலாம்.

இந்நிலையில் இத்தேர்தலை மையப்படுத்தி ஏற்படும் குழப்பங்களைக் குறைப்பதற்கு தேவையான நடவடிக்கைகளை எடுக்கும்படி சர்வதேச சமூகம் அழுத்தங்களைக் கொடுக்க வேண்டும் என அவர் இச்செவ்வியில் மேலும் தெரிவித்துள்ளார்.

இதேவேளை ராஜபக்ஸ அரசை வீழ்த்துவதே புலம்பெயர் சமூகத்தின் ஒரே இலக்காக காணப்படுவதாக பாதுகாப்பு செயலாளர் கோத்தபாய ராஜபக்ஸ தெரிவித்துள்ளார். தனியார் தொலைக்காட்சி ஒன்றுக்கு வழங்கிய செவ்வியின் போதே அவர் இவ்வாறு தெரிவித்தார்.

புனர்வாழ்வளிக்கப்பட்ட முன்னாள் போராளிகள் அந்த மனநிலையில் இருந்து 100 சதவீதம் மாற்றப்பட்டுள்ளார்கள் என உறுதியளிக்க முடியாது என்றும் அவர் குறிப்பிட்டார்.

விடுதலைப் புலிகளின் தலைவர் பிரபாகரனை பிடித்தது மாபெரும் வெற்றி என்பது போலவே கே.பியை பிடித்ததும் பெரிய வெற்றியென என அவர் குறிப்பிட்டார்.

மாகாண நீதிமன்றங்களிலும் சபைகளிலும் வழக்காடுதல்
சத்தியப் பத்திரம் தயாரித்தல்
ஸ்பொன்சர் படிவங்கள் நிரப்புதல்
பிரதிகளை அத்தாட்சிப்படுத்துதல்
மொழிபெயர்ப்புப் பணிகள்
இவை அனைத்துக்கும்
நியாயமான கட்டணத்தில் வேலை!
நிராதரவானவர்களுக்கு இலவச சேவை!
கனக.மனோகரன்
சட்டத்தரணி (இலங்கை)
சத்தியப் பிரமாண ஆணையாளர் (கனடா)
ஒன்றாறியோ சட்டசபையின் அங்கீகாரம் பெற்ற சட்டவாதி
Legal Counsel Licensed by
The Law Society of Upper Canada
720 Kennedy Road - Unit: 311 - Scarborough - ON M1K 2B7
Tel: 416 531 1650 Cell: 647 990 1650
Fax: 416 531 3466

Freedom 55
Financial
உங்கள் நாளைய வாழ்க்கைத்தரம்
இன்று நீங்கள் எடுக்கும்
முடிவுகளைப் பொறுத்ததே!



நூறு வருடங்களுக்கு மேலாக கனடாவில்
சேவையாற்றி வரும் ஸ்தாபனம்
LONDON LIFE
உங்கள் சேமிப்புக்களை பெருக்குவதும்
பாதுகாப்பதுமே எங்கள் குறிக்கோள். இதற்காக
நாங்கள் வைத்திருக்கும் திட்டங்கள்
+ Mortgage Family Term Life Insurance & Mortgages
+ Life Insurance (All Ages)
+ Disability Insurance, Critical Illness Insurance.
+ Individual Health, Dental & Travel & Visitors Insurance
+ Group Insurance & Retirement Plans
+ Investment Funds
+ RRIF'S & Annuities
+ RRSP & RESP
FOR FREE FAIR CONSULTATION
Please Contact:
JEGANATHAN BALASUNDARAM
ஜெகநாதன் பாலசுந்தரம் (பாலா)
B.Eng, CHS.(Certified Health Insurance Specialist)
National Quality Award Winner
Also represent Manu Life, Sun Life & Great West Life
A Division of London Life Insurance Company
2075 Kennedy Road, Suite 300
Scarborough, ON. M1T 3V3
Cell: 416-518-9489
Fax: 416-291-3779 Tel:416-291-0451 Ext. 227
TOLL FREE: 1-877-566-5433
E-Mail: bala.balasundaram@freedom55financial.com

# சம்பந்தர் இந்தியா சென்றது வருடாந்த மருத்துவ பரிசோதனைக்கே!

## ஜனாதிபதித் தேர்தல் தொடர்பாக இந்தியா சென்று பேச வேண்டியதில்லை

ஜனாதிபதித் தேர்தலில் யாருக்கு ஆதரவு அளிப்பது என்பது குறித்து, தமிழரசுக் கட்சியின் இன்றைய கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவு அரசியல் குழுவின் ஊடாக கூட்டமைப்பிடம் முன் வைக்கப்படும். அதன் பின்னரே இறுதி முடிவு எடுக்கப்படும் என தமிழரசுக் கட்சியின் தலைவரும் யாழ் மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினருமான மாவை சேனாதிராஜா தெரிவித்துள்ளார்.

இலங்கை தமிழரசுக் கட்சியின் மத்திய குழு கூட்டம் வவுனியா இரண்டாம் குறுக்குத் தெருவில் உள்ள விருத்தினர் விடுதியில் இடம் பெற்றது. அதன் பின்னர் ஊடகவியலாளர்களுக்கு கருத்துத் தெரிவிக்கும் போதே இவ்வாறு தெரிவித்தார். அவர் மேலும் தெரிவிக்கையில் தமிழரசுக்கட்சியின் செயற்குழு நிகழச்சி நிரலின் அடிப்படையில் இன்றைய அரசியல் நிலை ஜனாதிபதி தேர்தல் தொடர்பாகவும் ஏனைய விடங்கள் குறித்தும் கல்துரையாடியிருந்தோம். இந்தக் கூட்டம் கருத்து ஆராயும் கூட்டமாக இடம்பெற்றிருந்தது. பல மாவட்டங்களிலும் இருந்து வந்த எமது உறுப்பினர்களின் தமது கருத்துக்களை தெரிவித்தனர். இதன் போது அவர்களது கருத்துக்கள் ஒருமித்தனவாக இருந்தன.

இன்று இந்த கருத்துக்களை உள்வாங்கி தமிழரசுக்கட்சியின் அரசியல் குழு ஊடாக ஆராய்ந்து பொருத்தமான முடிவை எடுக்கவுள்ளோம். அவ்வாறு எடுக்கப்படும் முடிவு, தமிழ் தேசியக் கூட்டமைப்பின் தலைமைக்கு கொடுக்கப்படும். அதன் பின் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புதான் உரிய நேரத்தில் ஆராய்ந்து தீர்மானத்தை எடுக்கும் எடுக்கும்.- என்றார்.



ஜனாதிபதி வேட்பாளர்களுடன் ஒப்பந்தங்களை செய்துள்ளீர்களா என ஊடகவியலாளர்கள் கேள்வி எழுப்பினர் இதற்குப் பதிலளித்த மாவை எம்.பி, 'நாம் அவ்வாறான ஒப்பந்தங்கள் எதனையும் செய்யவில்லை என்பதனை திட்டவட்டமாக சொல்லுகின்றேன்' - என்றார். தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் அங்கம் வகிக்கின்றவர்கள் மறைமுகமாக மைத்திரிபாலவுக்கு ஆதரவான கருத்துக்களை கூறுவது தொடர்பாக உங்கள் கருத்து என்ன என கேட்டபோது - அவ்வாறு யாரும் பகிரங்கமாக மைத்திரிபால சிறிசேனவை ஆதரிக்க வேண்டும் என்று சொன்னதாக இல்லை. ஆனால் பொதுமக்கள் அனைவரும் வாக்களிக்க வேண்டும் என்ற கருத்தைத் தான் அவர்கள் வெளிப்படுத்தினர் என்று அறிகின்றோம். இன்றைய கூட்டத்திலும் எல்லோரும் வாக்களிப்பதற்கு வற்புறுத்தவேண்டும் என்ற கருத்தைத்தான் வலியுறுத்தினர்.- என்றார். ஜனாதிபதி வேட்பாளர்கள் இருவருமே தமிழ் மக்கள் நலன் தொடர்பில் எதுவித கருத்தையும் முன்வைக்காத நிலையில் தமிழ் மக்கள் கட்டாயம் வாக்களிக்க வேண்டும் என ஏன் கோருகிறீர்கள் எனக் கேட்டபோது அது மக்களின் ஜனநாயக உரிமை. அதனைப் பயன்படுத்துமாறு கோருகின்றோம். வேட்பாளர்களின் தேர்தல் விஞ்ஞாபனம் வந்த பின் எமது முடிவை மக்களுக்கு தெரிவிப்போம்.- என்றார். கூட்டமைப்பின் நாடாளுமன்ற குழு தலைவர் இரா.சம்பந்தனின் இந்திய விஜயம் ஜனாதிபதி தேர்தல் தொடர்பானதா எனக்கேட்ட போது அவர் ஏற்கனவே செய்து கொண்ட சத்திரசிகிச்சைக்காக வருடாந்தம் சிகிச்சை பெற்று வந்தார். அந்த சிகிச்சைக்காகவே அவர் இந்தியா சென்றுள்ளார். மாறாக ஜனாதிபதி தேர்தல் தொடர்பாக டில்லி சென்று பேச வேண்டிய தேவை தற்போதைக்கு ஏற்படவில்லை.

இராணுவத்தினரையும் சிங்கள விவ்சாயிகளையும் குடியேற்றுவதற்காக தமிழனை அழிக்கத் திட்டமிடுகின்ற ஆட்சியாளர்கள் தான் நாட்டில் இருக்கின்றார்கள் என இலங்கை தமிழரசுக் கட்சியின் தலைவரும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் பாராளுமன்ற உறுப்பினருமாகிய மாவை. சேனாதிராசா தெரிவித்தார். நாங்கள் தோற்றுப்போனவர்களல்ல. முள்ளிவாய்க்காலில் மடிந்து போனவர்களல்ல. நாம் நிமிர்கின்றவர்கள். எமது மண்ணில் எமது அடையாளங்களை அழித்து பௌத்த சின்னங்களை ஆக்கிரமிப்புக்காக பயன்படுத்தி இராணுவத்தினரையும் சிங்கள விவசாயிகளையும் இங்கே குடியேற்ற எம்மை அழிக்க திட்டமிடுகின்ற ஆட்சியாளர்கள் இந்த நாட்டில் இருக்கின்றார்கள்.


உங்கள் பிள்ளைகளின் முன்னேற்றமான எதிர்காலம் இங்கு ஆரம்பமாகிறது

NETKRAM
GIVING THE GIFT OF EDUCATION




கணித வகுப்புகள், ஆங்கில வகுப்புகள், பிரஞ்சு வகுப்புகள், பாடசாலை வீட்டுவேலை வகுப்புகள்.

FRENCH & ENGLISH READING CLASSES

HOME WORK CLASSES
Math
English
French
Other Subjects
GRADE 1 TO GRADE 6 ENGLISH AND FRENCH MEDIUM

MATH CLASSES
For Grade 1 - 12
INDIVIDUAL APPROACH FOR EACH STUDENT
(ADVANCE EXPLANATION)
தனிப்பட்ட முறையிலும் வகுப்புகள் நடத்தப்படும்

SPECIAL KIDS COMPUTER CLASS
> PROGRAMING LOGIC
> SKILL BUILDING ACTIVITIES

மாதாந்தத் தேர்வுகள் கணினி மூலம் கற்பிக்கப்படும்
உயர்தர வகுப்புகள்
Math for HIGH SCHOOL
French for HIGH SCHOOL
English for HIGH SCHOOL
எமது உயர்வகுப்பு மாணவர்கள் அதி உயர் புள்ளிகள் பெற்று (Honor) சித்தியடைந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது

சிறந்த முறையில் வடிவமைக்கப்பெற்ற பாடநெறி முறைகளும், வழிநடத்தலும் அதி உயர் புள்ளிகள் பெற்ற மாணவர்களுக்கு தொழிற் பயிற்சியளிக்கப்படும்

ADVANCE CLASSES
> UML
> PHP
> ASP.NET
> ASP
> JAVA
> C++, C#
> VISUALBASIC.NET
> DATABASES
> PC-TECHNICIAN
> A+ CERTIFICATION

OFFICE 2010/2007
WORD
EXCEL
POWERPOINT
ACCESS
OUTLOOK
Microsoft Office Specialist (MOS) Certification

INTERNET PROGRAMMING ( I )
HTML
CSS
XML
INTERNET PROGRAMMING ( II )
Javascript
Server Side Web Development
Internet Webmaster Certification

JOB TRAINING FOR QUALIFIED STUDENTS

COMPUTER
மின்கணினியில் பிரச்சனையா?
சிறந்த முறையில்
திருத்தி அமைத்து கொடுக்கப்படும்
-REPAIR -SALES
-UPGRADE
-SERVICES

opening hours
Mon - Thu : 4:00 PM - 9:00 PM
Sat - Sun : 9:00 AM - 5:00 PM
www.netkram.com

Contact : 905 - 471 - 1230
30 New Delhi Drive, Unit 68
Markham and 14th Avenue

# கனடா இந்து



**சைவ சேவா**

திருமணம் - வீடு குடிபுகுதல் - ருது சாந்தி பூஜை - புண்யாகவாசனம் - 31ம் நாள் துடக்கு கழித்தல் - வீட்டுக்கிருத்தியம் (திவசம்) - கணபதி ஹோமம் - லட்சுமி ஹோமம் - நவக்கிரக ஹோமம் போன்ற அனைத்து சைவக் கிரியைகளுக்கும் தொடர்புகொள்க

647-618 7755




வெளியீடு : துர்க்கேஸ்வரம், ஸ்ரீதுர்க்காதேவி அம்பாள் திருக்கோவில் | 30 Carnforth Road Toronto, ON, M4A 2K7 | Tel: 416 - 759 9648 www.durka.com

# 1-1-2015 வியாழக்கிழமை துர்க்கேஸ்வரம் திருக்கோவிலில் நவ (9 லட்சம்) லட்சார்ச்சனை

கடந்த ஆண்டிலிருந்து, துர்க்கேஸ்வரம் திருக்கோவிலில் ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி மாதம் 1ம் திகதி அம்பாளுக்கு ஒன்பது லட்சம் அர்ச்சனை (நவலட்சார்ச்சனை) வழிபாடு நடைபெற்று வருகின்றது. இவ்வாண்டும் நவலட்சார்ச்னை காலை 10 மணி முதல் நடைபெற அம்பாளின் திருவருள்கூடி வந்துள்ளது.

ஜனவரி 1ம் திகதி காலை திருவெம்பாவை வழிபாடுகள் நடைபெறுவதனால், ஆலயம் காலை 6 மணிக்கு திறக்கப்படும். காலை 6.30 மணி முதல் 7.30 மணி வரை திருவெம்பாவை வழிபாடுகள் நடைபெற்று, அதன் பின்னர், காலை 8.30 மணிக்கு அபிஷேகம் அலங்காரம் நடைபெற்று, காலை 9.30 மணிக்கு வழமைபோல காலைசந்திப் பூஜை இடம்பெறும். தொடர்ந்து காலை 10 மணி முதல் நவ(ஒன்பது லட்சம்) அர்ச்சனை வழிபாடு நடைபெறும். இந்த அர்ச்சனையில் பக்தர்களுக்கு தர்ப்பை அணிந்து சங்கல்பம் செய்யப்பெற்று இஸ்டசித்திபெறும் பிரார்த்தனை இடம்பெறும்

ஜனவரி 1ம் திகதி மாலை 5 மணி முதல் 7.30 மணி வரை, வி.எஸ்.தெய்வந்திரன் தலைமையில் கனடாவின் பிரசித்தி பெற்ற பாடகர்கள் இணைந்து வழங்கும் இன்னிசை மாலை நடைபெறவுள்ளது. கடந்த 23 ஆண்டுகளாக ஒவ்வொரு ஆண்டும் இந்த இசை நிகழ்ச்சியை துர்க்கேஸ்வரம் ஆலயத்தில் வி.எஸ்.தெய்வேந்திரன் நிகழ்த்தி வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இரவு 9.30 மணிக்கு அர்த்தஜாமப் பூஜையுடன் வழிபாடுகள் யாவும் பூர்த்தியுறும்.



## செஞ்சொற்செல்வர் ஆறுதிருமுருகன் அவர்களை "தெய்வத் திருமகன்" என துர்க்கேஸ்வரம் ஆலயம் கௌரவித்தது

கடந்த வாரம் கலாநிதி ஆறுதிருமுருகன் அவர்கள் வடஅமரிக்க பயண நிறைவுச் சொற்பொழிவை துர்க்கேஸ்வரம் திருக்கோவிலில் நிகழ்த்தினார். அவரது சமயப்பணியையும் சமூகப் பணியையும் பாராட்டிய துர்க்கேஸ்வரம் திருக்கோவில் தலைவரும் ஸ்தாபகரும் பிரதமகுருக்களுமான மஹாகுரு. தியாகராஜ கணஸ் சுவாமிகள், ஆலயத்தின் சார்பாக "தெய்வத் திருமகன்" என்ற கௌரவத்தினை அவருக்கு வழங்கினார். பிரதம குருக்களும், அவரோடு இணைந்து பல பக்தர்களும், திரு.ஆறுதிருமுருகன் அவர்களின் பணிக்கு நிதிநல்கி துணைபுரிந்தனர்.

## துர்க்கேஸ்வரத்தில் ஆருத்திரா தரிசனம்

4-1-2015 ஞாயிற்றுக்கிழமை
காலை 7 மணிக்கு - ஆருத்திரா அபிஷேகம்
காலை 7.56 மணிக்கு
ஆருத்திரா தரிசனம்

**கஜமுகாசுர சம்ஹாரம்**

26-12-2014 வெள்ளி
இரவு 7 மணிக்கு

விநாயகப் பெருமான் கஜமுகன் என்னும் அசுரனை அழித்து பக்தருக்கு அருளும திருக்காட்சி

**416 — 759 9648**
**துர்க்கேஸ்வரம்**

2018ம் ஆண்டு வரைக்கான உங்கள் திருமண முகூர்த்தங்களை எம்மிடம் கணித்துப் பெற்றுக்கொள்ளலாம்

**சைவ சேவா**
618-618 7755

**துர்க்கேஸ்வரத்தில் திருவெம்பாவை**

26-12-2014 முதல்
4-1-2015 வரை

காலை 6.30 மணிக்கு ஆரம்பமாகி காலை 7.30 மணிக்கு நிறைவுறும்

**துர்க்கேஸ்வரத்தில் நவலட்சசார்ச்சனை**
(ஒன்பது லட்சம் அர்ச்சனை)

**1-1-2015 வியாழன்**

பகல் 10 மணிக்கு ஆரம்பம்

# துர்க்கேஸ்வரத்தில்

## 4-1-2015 ஞாயிற்றுக்கிழமை

## காலை 8 மணி முதல் பகல் 1 மணி வரை

கனடாவில் உள்ள இசைக் கல்லூரிகள் இணைந்து நடாத்தும்
மாபெரும் கலைநிகழ்வு

துர்க்கேஸ்வரம் நாட்டிய சங்கீத வித்வச்சபா வழங்கும்

# திருவாதிரைத் திருவிழா

## (ஆனந்த நடராஜர் உற்சவம்)

# தீவிரவாதிகள் அரசியலில் ஈடுபடும் போது படையினர் அரசியலில் ஈடுபட்டால் என்ன? கோத்தாவின் கேள்வி!

தீவிரவாதிகள் அரசியலில் ஈடுபடும் போது படையினர் அரசியலில் ஈடுபட்டால் என்ன என்று சிறிலங்காவின் படைத்துறைச் செயலாளர் கோத்தபாய ராஜபக்ச கேள்வி எழுப்பியுள்ளார்.

சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தலில் மகிந்த ராஜபக்சவுக்கு ஆதரவு திரட்டும் பணியில் ஓய்வுபெற்ற மற்றும் சேவையில் உள்ள படையினரை அரசாங்கம் ஈடுபடுத்தியுள்ளதாக எதிர்க் கட்சிகள் குற்றம் சுமத்தியுள்ளன.

இந்நிலையில் இந்தக் குற்றச்சாட்டுக்கள் தொடர்பாக கருத்துத் தெரிவிக்கும் போதே அவர் இவ்வாறு கேள்வி எழுப்பியுள்ளார். இது தொடர்பில் அவர் மேலும் தெரிவித்துள்ளதாவது:

சிறிலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவுக்கு ஆதரவாக தேர்தல் பரப்புரைக்கு ஓய்வு பெற்ற படையினரை பயன்படுத்துவதாக என்மீது குற்றம் சுமத்துபவர்கள் ஒன்றை மறந்து விட்டனர்.

சிறிலங்காவின் கூட்டுப்படைகளின் தளபதியாக இருந்து கொண்டு தான் ஜெனரல் சரத் பொன்சேகா அரசியலில் பிரவேசித்தார். 2010ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் தான் போட்டியிடப் போவதாக அறிவித்த பின்னர் தான் சரத் பொன்சேகாவின் இராஜினாமாவை சிறிலங்கா ஜனாதிபதி ஏற்றுக் கொண்டிருந்தார்.

இந்த ஜனாதிபதித் தேர்தலில் பெரும்பாலான படையினர் அரசாங்கத்தையே ஆதரிப்பர். போரை முடிவுக்கு கொண்டு வர சிறந்த அரசியல் தலைமையை வழங்கிய ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவை குற்றச்சாட்டுகள் மூலம் தோற்கடித்து விடமுடியாது.

ஓய்வுபெற்ற படையினர் அரசியலில் ஈடுபடுவதற்கோ தேர்தலில் போட்டியிடுவதற்கோ அல்லது எந்தக் கட்சிக்கும்



ஆதரவு தெரிவிப்பதற்கோ எவ்வித தடையும் இல்லை. அது அவர்களின் விருப்பம் சார்ந்தது.

ஜனநாயக கட்சியின் தலைவர் சரத் பொன்சேகாவை விட மேலும் பல ஓய்வு பெற்ற படை அதிகாரிகள் அரசியலில் ஈடுபட்டுள்ளனர். பல்வேறு அரசியல் கட்சிகளிலும் அவர்கள் அங்கம் வகிக்கின்றனர்.

ஒரு குறிப்பிட்ட அரசியல் கட்சிக்கு ஓய்வு பெற்ற படை அதிகாரிகள் ஆதரவு தெரிவிப்பதற்கு எதிர்ப்புத் தெரிவிப்போர் 1989ஆம் ஆண்டு காலப் பகுதியில் விடுதலைப் புலிகள் அரசியல் கட்சியாக அங்கீகரிக்கப்பட்டதை மறந்து விட்டனர்.

அதேபோன்று விடுதலைப் புலிகள் தவிர்ந்த ஏனைய எல்லா தீவிரவாத அமைப்புகளும் அரசில் கட்சியாக தம்மை பதிவு செய்து கொண்டு தேர்தலில் போட்டியிட்டன என்று அவர் மேலும் தெரிவித்துள்ளார்.

இதேவேளை சிறிலங்கா ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவின் ஆளும் கட்சி தமது தேர்தல் பரப்புரை நடவடிக்கைகளுக்காக சிறைக்கைதிகளை பயன்படுத்துவதாக கபே என்ற தேர்தல் கண்காணிப்பு அமைப்பு குற்றம் சுமத்தியுள்ளது.

இது தொடர்பில் கருத்து வெளியிட்டுள்ள கபே அமைப்பின் நிறைவேற்று இயக்குனர் கீர்த்தி தென்னெக்கோன் மாத்தறை கம்புறுப்பிட்டிய பகுதியில் கடந்த ஞாயிற்றுக்கிழமை இடம்பெற்ற ஆளுங்கட்சியின் தேர்தல் பரப்புரைக் கூட்டத்திலேயே இச்சம்பவம் இடம் பெற்றதாக தெரிவித்துள்ளார்.

இது தொடர்பில் அவர் மேலும் குறிப்பிடுகையில் இந்த தேர்தல் பரப்புரைக் கூட்டத்தில் மகிந்த ராஜபக்சவுக்கு ஆதரவாக காலி சிறைச்சாலையில் இருக்கும் 44 கைதிகள் பரப்புரைகளுக்கு பயன்படுத்தப்படடுள்ளனர்.

இந்தப் பரப்புரைக் கூட்டத்தை சிறிலங்காவின் சிறைச்சாலைகள் மறுசீரமைப்பு அமைச்சர் சந்திரசிறி கஜதீர தலைமையேற்று நடத்தியுள்ளார்.

இச்சம்பவத்தின் மூலம் சிறிலங்காவின் தேர்தல் சட்டங்கள் மாத்திரமல்லாமல், சிறைக் கைதிகள் குறித்த சர்வதேச சட்டங்களும் மீறப்பட்டுள்ளன.

இந்தக் கூட்டத்துக்காக சிறைச்சாலைகள் துறைக்கு சொந்தமான வாகனங்களும் ஏனைய உபகரணங்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இது தொடர்பாக சிறிலங்காவின் தேர்தல் ஆணையாளருக்கு முறையிடப்பட்டுள்ளது' என கபே அமைப்பின் நிறைவேற்று இயக்குனர் கீர்த்தி தென்னெக்கோன் மேலும் தெரிவித்துள்ளார்.

# இணையத்தளக் கருத்துக் கணிப்பில் மைத்திரிக்கு 76 வீத வாக்குகள் விழும்!

இணையத்தளத்தில் எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தல் தொடர்பில் நடத்தப்பட்டு வரும் கருத்து கணிப்பில் புதிய ஜனாநாயக முன்னணியின் வேட்பாளர் மைத்திரிபால சிறிசேன 76.49 வீத வாக்குகளை பெற்று முன்னணியில் இருக்கின்றார்.

11.74 வீத வாக்குகளை பெற்று மகிந்த ராஜபக்ஷ இரண்டாவது இடத்தில் இருக்கின்றார்.

சுயாதீன கருத்து கணிப்பு நிறுவனம் ஒன்று நடத்தி வரும் இந்த கருத்து கணிப்பு கண்காணிப்பு மற்றும் பகுப்பாய்வுகள் அறிவியல் ரீதியான உபகரணங்களை பயன்படுத்தி மேற்கொள்ளப்படுகின்றன. இதனை ஒரு வேட்பாளருக்கு ஆதரவாகவோ பக்கசார்பாகவோ நடத்தவில்லை என கருத்து கணிப்பை நடத்தி வரும் குழூ தெரிவித்துள்ளது.

கருத்து கணிப்பில் கலந்து கொண்ட பின்னர் முடிவுகள் உடனடியாக கலந்து கொண்டவருக்கு காண்பிக்கப்படும். அத்துடன் முடிவுகளை எவரும் பார்க்க முடியும். கருத்து கணிப்பில் கலந்து கொள்பவர்களின் ரகசியம் முழூமையாக பாது காக்கப்படும் என அவர்கள் தெரிவித்துள்ளனர்.


NON MEDICAL INSURANCE

| AGE | 45 M | 45 F | 50 M | 50 F | 55 M | 55 F | 60 M | 60 F | 65 M | 65 F | 70 M | 70 F |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10K | 27 | 23 | 28 | 24 | 35 | 30 | 44 | 36 | 60 | 46 | 83 | 62 |
| 20K | 50 | 40 | 52 | 41 | 64 | 54 | 83 | 67 | 115 | 87 | 160 | 118 |
| 30K | 72 | 57 | 74 | 59 | 93 | 78 | 122 | 98 | 169 | 128 | 237 | 174 |
| 40K | 94 | 74 | 98 | 77 | 123 | 101 | 160 | 129 | 223 | 169 | 315 | 230 |
| 50K | 116 | 91 | 120 | 95 | 152 | 125 | 199 | 159 | 278 | 210 | 392 | 287 |
| 100K | 227 | 177 | 235 | 185 | 399 | 245 | 392 | 354 | 550 | 415 | 768 | 569 |

20 YEARS TERM NON MEDICAL INSURANCE

| AGE | 45 M | 45 F | 50 M | 50 F | 55 M | 55 F | 60 M | 60 F | 65 M | 65 F | 70 M | 70 F |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 100K | 39 | 33 | 63 | 47 | 99 | 79 | 164 | 111 | 267 | 173 | 452 | 297 |
| 150K | 55 | 46 | 91 | 66 | 147 | 103 | 243 | 163 | 397 | 256 | 675 | 442 |

RESP! RESP!! RESP!!!
இன்றே RESP ஆரம்பியுங்கள்
அது உங்கள் குழந்தையின்
எதிர்காலத்தை வளமாக்கும்

Thana Manickavasagar
Broker
Cell : 416-728-5772
Off : 416-519-3896
Fax : 647-547-8147

No Mediacl Exam, No Doctor's Report,
No Needles, Fast Approval within 48hrs.

100% Tax FREE Money














Manulife

MEDICAL INSURANCE FOR SUPER VISA 100%
REFUND IF VISA DENIED

No body beats my price!
No body beats my service!



Your Referrals Will be Rewarded
E-mail : thana7@gmail.com Web : www.thana.ca
80 Nashdene Road, Unit D218, Scarborough, ON, M1V 5E4

# ஜனாதிபதித் தேர்தல்:- தமிழ்மக்கள் பார்வையாளர்களா?

கட்டுரையாளர்:
யாழ்ப்பாணத்தில் இருந்து
- நிலாந்தன் -



ஜனாதிபதித் தேர்தலை நோக்கி ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சி மேலும் உடைவது என்பது மஹிந்த ராஜபக்ஷவுக்கு மட்டும் அச்சுறுத்தலானது அல்ல. அதை அதன் தர்க்கபூர்வ விளைவுகளை கருதிக் கூறின் ரணில் விக்கிரமசிங்கவுக்கும் ஒரு விதத்தில் ஆபத்தானது தான். ரணிலைப் பொறுத்த வரை அவருக்கு வெற்றி வேண்டும். அதற்காக அவர் ஒப்பீட்டளவில் நீண்ட காலம் காத்திருந்து விட்டார். கிடைக்கப்போகும் வெற்றியைப் பொறுத்தே அவர் கட்சிக்குள் தன்னுடைய தலைமை ஸ்தானத்தையும் பாதுகாக்க வேண்டியிருக்கும். தனது தலைமைக்கு சவாலாக கட்சிக்குள் எழுச்சி பெற்று வரும் இரண்டாம் நிலை தலைவர்களை தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதற்கு அவருக்கு வெற்றி அவசியம். ஆனால் அந்த வெற்றியானது திருமதி. சந்திரிக்காவை அளவுக்கு மிஞ்சி பலப்படுத்தும் ஒன்றாக அமைவதை ரணில் விரும்ப மாட்டார்.



அதாவது ஸ்ரீலங்கா சுதந்திர கட்சியின் வாக்குவங்கியை எந்தளவிற்கு உடைக்கப்படுகிறதோ அந்த அளவிற்கு வெற்றிக்கான வாய்ப்புக்களும் அதிகரிக்கும். அவ்வாறு ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் பாரம்பரிய வாக்கு வங்கியை உடைத்தெடுக்கும் சக்தி சந்திரிக்காவுக்கே உண்டு. எனவே தேர்தலில் கிடைக்கக்கூடிய வெற்றி எதுவும் அந்தவாக்குகளில் தான் அதிகம் தங்கியிருக்கும். இவ்வாறாக சந்திரிக்கா உடைத்துக் கொண்டு வரும் வாக்குகளின் எண்ணிக்கை அதிகரிக்கும் போது அது அதன் தர்க்க பூர்வ விளைவாக சந்திரிக்காவின் கையை மேலோங்க செய்துவிடும். சந்திரிக்காவின் கை ஒரு அளவுக்கு மேல் மேலோங்குமாக இருந்தால் அது குறித்து மஹிந்த ராஜபக்ஷ மட்டுமல்ல ரணிலும் அச்சமடைவார்.

ஏனெனில் பாரம்பரிய யூ.என்.பி வாக்குகளால் மட்டும் வெற்றி கிடைக்காது என்பதால் தான் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சிக்குள் இருந்தும் வாக்குகளை உடைக்க வேண்டியிருக்கிறது. இவ்வாறு சந்திரிக்கா உடைத்துக் கொண்டு வரப்போகும் வாக்குகளே வெற்றிக்குக் காரணமாக அமையக் கூடும் என்பதால் தான் மைத்திரிபால பொது வேட்பாளராக நிறுத்தப்பட்டார். அதேசமயம் அவ்வாறு சந்திரிக்கா உடைத்துக் கொண்டு வரும் வாக்குகளின் அளவு காரணமாக அவர் அடுத்தடுத்த கட்டங்களில் ரணிலை மீறிச் சிந்திக்க முடியும். இது அதன் இயல்பான வளர்ச்சிப் போக்கில் ஒரு கட்டத்தில் தானே தலைவியானால் என்ன என்று சந்திரிக்காவை சிந்திக்கத் தூண்டும். அதாவது இப்போது கிங்மேக்கராக இருக்கும் சந்திரிக்கா கிங்காக வரலாமா என்று யோசிக்கக்கூடும்.

எனவே ரணிலைப் பொறுத்த வரை வெற்றியும் வேண்டும். ஆனால் அந்த வெற்றி சந்திரிக்காவை அவருக்கு எதிராக திருப்பிவிடாத ஒரு வெற்றியாகவும் இருக்க வேண்டும். இப்படிப் பார்த்தால் அவரைப் பொறுத்த வரை இது ஒரு சூதாட்டம் தான். ஆனால் நிச்சயமாக வாழ்வா சாவா போராட்டம் அல்ல.

ஏனெனில் தேர்தலில் தோற்றால் பொது எதிரணிக்குள் உள்ள தலைவர்களில் ரணிலுக்கே ஒப்பீட்டளவில் குறைந்த பாதிப்பு ஏற்படும். தோல்வியுற்றால் கட்சிக்குள் அவருடைய தலைமைத்துவம் ஆட்டங் காணக் கூடும். ஆனால் அதைத் தவிர வேறு ஆபத்துக்கள் இருக்காது. ஏற்கனவே இவ்வாறு கட்சிக்குள் அவருக்கு நெருக்கடிகள் வந்த போது அவரை ராஜபக்ஷ காப்பாற்றியிருக்கிறார். இந்த உறவு இனி மேலும் ரணிலை பாதுகாக்கும்.

ஆனால் அரங்கில் நிற்கும் ஏனைய தலைவர்களின் நிலைமை அவ்வாறில்லை. தேர்தலில் தோற்றால் அது சந்திரிக்காவுக்கும் மைத்திரிபாலவுக்கும் வெறும் தேர்தல் தோல்வியாக மட்டும் அமையாது. சில சமயம் சரத்பொன்சேகாவுக்கு நடந்ததே அவர்களுக்கும் நடக்கக்கூடும். அவர்களைப் பொறுத்த வரை இது ஏறக்குறைய வாழ்வா சாவா போராட்டம் தான். தோற்றால் அவர்கள் நாட்டை விட்டு வெளியேற வேண்டியும் ஏற்படலாம்.

அவர்களைப் போல ஒரு நிலைமை தான் அரசாங்க தரப்புக்கும். ராஜபக்ஷ சகோதரர்களைப் பொறுத்த வரை இது தோற்கப்பட முடியாத ஒரு போராட்டம். ஏனெனில் அது வெறும் தேர்தல் தோல்வியாக மட்டும் அமையாது. அவர்களைப் பொறுத்த வரை அது ஒரு தண்டனையாகவும் அமைந்து விடக்கூடும். சிம்மாசனத்தைத் தவிர இந்த பூமியில் வேறு எந்த ஓரிடமும் அவர்களுக்கு பாதுகாப்பானது அல்ல. அதிகாரத்தில் இருக்கும் வரையில் தான் அவர்கள் பாதுகாப்பாக இருக்க முடியும். ரணிலைக் குறித்து அவர்கள் அஞ்ச மாட்டார்கள். ஆனால் சந்திரிக்காவைக் குறித்து அவர்கள் அதிகம் அஞ்சுவார்கள்.

ஏனெனில் இப்போது நடந்து கொண்டிருப்பது பண்டார நாயக்க வம்சத்திற்கும் ராஜபக்ஷ வம்சத்திற்கும் இடையிலான ஒரு வம்ச சண்டையே. முன்னைய மன்னர் ஆட்சிக்காலங்களில் நிகழ்ந்த வம்ச சண்டைகளைப் போன்றதே இதுவும். இதில் வெற்றி அல்லது தண்டனை என்ற இரண்டு தெரிவுகளே உண்டு.

தோல்வியுற்றால் பொது எதிரணியை சேர்ந்தவர்கள் மேற்கு நாடுகளில் தஞ்சம் கோர முடியும். ஏனெனில் அவர்களுக்குப் பின்னால் மேற்கு நிற்கிறது. ஆனால் ராஜபக்ஷ சகோதரர்களை பொறுத்த வரை அத்தெரிவிலும் நெருக்கடிகள் உண்டு. அவர்களில் சிலர் மேற்கு நாடுகளில் பிரஜா உரிமை பெற்றிருக்கிறார்கள். ஆனால் அதே மேற்குநாடுகளின் பின்பலத்தோடு தான் தமிழ் புலம்பெயர்ந்த சமூகம் அவர்கள் மீது போர்க் குற்றச்சாட்டுக்களை முன்வைத்து வருகிறது. போர்க் குற்றம் தொடர்பிலான உலகப்பொது அனுபவத்தைப் பொறுத்த வரை பதவியிலிருந்து இறக்கப்பட்டவர்களே பெரும்பாலும் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே பதவியிலிருப்பது தான் இது விடயத்தில் அதிகம் பாதுகாப்பானது.

தோற்கடிக்கப்பட்டு மேற்கு நாடுகளில் புகலிடம் தேடுவது என்பது ஏறக்குறைய வழக்குத் தொடுநரிடம் தஞ்சம்கோருவதற்கு சமமானது. சக்தி மிக்க தமிழ் புலம் பெயர்ந்த சமூகம் வசித்து வரும் மேற்கு நாடுகளை நோக்கி செல்வது என்பது தாமாக சென்று பொறிக்குள் சிக்கியது போலாகக்கூடும்.

இது தொடர்பில் வேறு விதமான அபிப்பிராயங்களும் உண்டு. சிங்கள பௌத்த மேலாண்மை வாதம். அதன் வெற்றி நாயகர்களை என்றைக்குமே பிறத்தியாரிடம் காட்டிக் கொடுக்காது என்பதே அது. அனால் இங்கு பிரச்சினை என்னவென்றால் இம்முறை தோற்றாலும் பிறகொரு காலம் மறுபடியும் எழுச்சி பெறத்தேவையான ஓர் அடிப்படை தகைமை ராஜபக்ஷ வம்சத்திற்கு உண்டு. அது என்னவெனில் ஈழப்போரின் வெற்றி நாயகர்கள் அவர்களே என்பது தான். சிங்கள பௌத்த மேலாண்மை வாதத்தை பொறுத்த வரை அது எப்பொழுதும் செல்லுபடியாகும் ஒரு தகைமை தான். எனவே மீண்டும் ஒரு முறை அவர்கள் ஆட்சிக்கு வந்தால் அதன் விளைவுகள் எப்படி அமையும் என்பது சந்திரிக்காவுக்குத் தெரியும். எனவே அவர் வெற்றிபெற்றால் ஆகக்கூடிய பட்சம் முன்னெச்சரிக்கையோடு தற்காப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுவார். இப்படிப் பார்த்தால் தோற்பது என்பது ராஜபக்ஷ சகோதரர்களை பொறுத்த வரை ஏதோ ஓர் எதிரியின் இரக்கத்தை நம்பிச் சீவிப்பது தான். எனவே அவர்களைப் பொறுத்த வரை இது தோற்கக்கூடாத ஒரு யுத்தம். அதாவது வாழ்வா சாவா போராட்டம். தோல்வியை தவிர்ப்பதற்காக அவர்கள் வழமைகளை மீறி சிந்திக்கக்கூடும்.

இந்த அரசாங்கம் தேர்தல் மூலம் தெரிவு செய்யப்பட்ட ஓர் அரசாங்கம் தான். ஆனால் இந்த அரசாங்கத்தை தேர்தல் மூலம் அகற்ற முடியுமா? என்ற கேள்விக்குரிய விடை அவர்களிடம் மட்டும் தான் உண்டு. தேர்தலில் பொது எதிரணி தோற்றால் ரணிலின் தலைமைத்துவம் ஆட்டம் காணும். ஆனால் சந்திரிக்காவுக்கும் மைத்திரிக்கும் பாதுகாப்பற்ற ஓர் எதிர்காலம் உருவாகும். ஆனால் அரசாங்கம் தோற்றால் இலங்கைத் தீவின் அரசியலே நிச்சயமற்ற ஒரு காலகட்டத்தை கடக்க வேண்டியிருக்கும்.

அப்படியொரு நிச்சயமற்ற நிலைமை தோன்றுமா இல்லையா என்பதைக் குறித்து கொழும்பிலுள்ள மேற்கத்தைய நாடுகளின் தூதுவர்கள் சிந்திக்கத் தொடங்கி விட்டதாக தகவல்கள் கிடைக்கின்றன. சக்தி மிக்க மேற்கத்தைய நாடுகளின் தூதுவர்கள் சிலர் தமிழ் கட்சிகளின் பிரமுகர்கள் சிலருடன் இது தொடர்பாக உரையாடியதாகவும் சில தகவல்கள் உண்டு. அப்படிப்பட்ட ஒரு நிலைமை குறித்து இப்பொழுது உரையாடுவது சற்று காலத்தால் (36ம் பக்கம் பார்க்க)

Sulasie Foods
சுலாசி
Manufacturers Sweets & Snacks
100 % Pure vegetarian food catering
3011 Markham Road #57
Tel: 416-879-2725 Cell: 416-712-2020
உங்களுக்கு தெரியுமா?
Home Made Jaffna Style Home Food
தற்போது புதிய முகவரியில்: Sulasie Foods, 3011 Markham Road #57, Scarborough, Markham & McNicoll Centre Plaza இல் திறக்கப்பட்டுள்ளது என்பதை எமது அன்பான சகல வாடிக்கையாளர்களுக்கும் அறியத்தருகின்றோம்.

Sweets & Snacks
100% Pure Vegetarian Catering

கோயில் பூசை விழாக்கள், ஐயப்பன் பஜனை பூசைகள், பஜனை வைபவங்கள், புதுமனை புகுவிழாக்கள், பூப்புனித நீராட்டு விழாக்கள், அந்தியேட்டி மற்றும் Hall களுக்குத் தேவையான சகல விதமான உணவுவகைகள், பலகாரவகைகள் ஓடர் செய்து உடனுக்குடன் பெற்றுக்கொள்ளலாம்.

பயத்தம் பலகாரம், சீனிஅரியதரம், முறுக்கு, பால்றொட்டி, பருத்தித்துறை வடை, பூந்திலட்டு, மிக்சர், பகோடா, வடை, மோதகம், பல்லுக்கொழுக்கட்டை, றவைலட்டு, சீடை மற்றும் பல.....

எங்களின் பலகாரவகைகளை நேரில் வந்து இலவசமாகச் சுவைத்துப் பார்த்து உண்மையை உணர்ந்து கொள்ளலாம். மீண்டும் கூறுகின்றோம்! நேரில் வாருங்கள்! சுவைத்துப் பாருங்கள்! உண்மையை அறியுங்கள்.

Sulasie Foods (R. Silojana)
3011 Markham Road Unit #57

Bus: 416-879-2725
Cell: 416-712-2020
Res: 416-289-3194

# ஸ்ரீலங்காவின் ஜனாதிபதித் தேர்தலில் தமிழ்மக்கள் வாக்களிப்பது மிகவும் முக்கியம் என்கிறார் சுமந்திரன்



சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தலில் தமிழ் மக்கள் வாக்களிப்பது மிகவும் முக்கியமானது என தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ.சுமந்திரன் வலியுறுத்தியுள்ளார்.

அதேவேளை தமிழ் மக்களின் தேசியப் பிரச்சினைக்கு இந்த ஜனாதிபதித் தேர்தல் முடிவுகள் தீர்வை வழங்கப் போவதில்லை என்றும் அவர் கூறியுள்ளார்.

சிறிலங்காவின் ஜனாதிபதித் தேர்தல் அடுத்த மாதம் 8ஆம் திகதி இடம்பெறவுள்ள நிலையில் இந்தத் தேர்தல் தொடர்பில் கொழும்பு ஆங்கில ஊடகம் ஒன்றுக்கு கருத்துத் தெரிவித்த போதே அவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இது தொடர்பில் அவர் மேலும் தெரிவித்துள்ளதாவது:

சிறிலங்காவில் அடுத்த மாதம் 8ஆம் திகதி இடம்பெறவுள்ள ஜனாதிபதித் தேர்தல் தமிழ் மக்களின் தேசியப் பிரச்சினைக்குத் தீர்வைத் தரக்கூடிய தேர்தலாக இருக்காது என்ற ஆலோசனையை நாம் எமது மக்களுக்கு தெரிவிக்க விரும்புகிறோம்.

இந்தத் தேர்தலில் யாரை ஆதரிப்பது என தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு இதுவரை முடிவு செய்யவில்லை. இது தொடர்பில் நாம் எமது மக்களுடன் தொடர்ந்து கலந்துரையாடி வருகிறோம். தமது வாக்குகளை அளிக்கவுள்ள எமது மக்களின் ஆலோசனையைப் பெற்றே நாம் முடிவு எடுக்கவுள்ளோம். இந்த ஜனாதிபதித் தேர்தலில் தமிழ் மக்கள் வாக்களிப்பது மிகவும் முக்கியமானது என்ற அறிவுரையை மக்களுக்கு நாம் தெரிவிக்கின்றோம். சிறிலங்காவின் ஜனாதிபதி தேர்தலைப் புறக்கணிக்குமாறு தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு வலியுறுத்துவதாக பரப்பப்படுகின்ற வதந்திகள் முற்றிலும் பொய்யானவை. இந்தத் தேர்தல் தொடர்பில் நாங்கள் எந்த நிலைப்பாட்டை எடுப்பது என்று முடிவுக்கு இன்னமும் வரவில்லை.

ஆயினும் இத்தேர்தலில் கட்டாயம் வாக்களிக்குமாறு எமது மக்களைக் கோருவது என்று மட்டும் இப்போது முடிவு செய்துள்ளோம். இதனை மக்களுக்குத் தெளிவாக எடுத்துக் கூறுகிறோம்.

இந்தத் தேர்தலில் அளிக்கப்படும் ஒவ்வொரு வாக்கும் முக்கியமானது. எனவே இத்தேர்தலில் வாக்களிக்காமல் விடுவது குறித்தோ அல்லது தேர்தலைப் புறக்கணிப்பது குறித்தோ மக்கள் சிந்திக்கக் கூடாது. கடந்த ஐந்து ஆண்டுகளில் இடம் பெற்ற தேர்தல்களில் நாம் எமது பலத்தை வெளிப்படுத்தியது போன்றே இந்த தேர்தலிலும் எமது வாக்குகளை அளிப்பதன் மூலம் எமது பலத்தை வெளிப்படுத்த முடியும். எமது மக்களுக்கு நாம் கூறும் ஆலோசனை இது ஒன்று தான். இத்தேர்தல் தொடர்பில் எமக்குள்ள தெரிவுகள் குறித்து கிராம மட்டத்தில் மக்களின் கருத்துக்களை நாம் அறிந்து வருகிறோம். இந்தக் கலந்துரையாடல்களை முடித்து அது தொடர்பிலான எமது நிலைப்பாட்டை விரைவில் அறிவிப்போம்.

இத்தேர்தல் தொடர்பில் எம்முடன் பேசவேண்டிய தேவை இல்லை என்று சிறிலங்கதாவின் ஆளும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி ஏற்கனவே கூறிவிட்டது. அவர்கள் எம்முடன் பேச விரும்பவில்லை.

அதேவேளை இந்தத் தேர்தலுக்குப் பின்னரே தேசியப் பிரச்சினைக்கான தீர்வு குறித்து கலந்துரையாட முடியும் என்று எதிரணியின் பொதுவேட்பாளர் மைத்திரிபால சிறிசேன தெரிவித்துள்ளார்.

இலங்கையின் தேசியப் பிரச்சனையை ஒரு தேர்தல் விவகாரமாக இரு பிரதான வேட்பாளர்களுமே கருத்தில் எடுத்துக் கொள்ளத் தயாராக இல்லை. இத்தேர்தலில் வாக்களிப்பதற்கு முன்னதாக மக்கள் இதனைக் கருத்தில் எடுத்துக் கொள்வது முக்கியம். நாம் தமிழ் வாக்காளர்களை எமது முடிவுக்கு இழுத்து வரவில்லை. நாம் ஒரு பிரபலமான கட்சி என்ற வகையில் எமது மக்களுடன் கலந்துரையாடியுள்ளோம். இந்தக் கலந்துரையாடல் மக்களுக்கு நம்பிக்கையளிக்கும் எனவும் சுமந்திரன் தெரிவித்தார்.


## அலுவலகம் வாடகைக்கு!

Kipling / Steeles - Etobicoke பகுதியில் பிரபலமாக இயங்கி வரும் தமிழர் வர்த்தக நிலையத்தின் உள்ளே சிறப்பாக வடிவமைக்கப்பட்ட அலுவலகங்கள் வாடகைக்கு உண்டு. வருமானவரித் தயாரிப்பு, வீடு விற்பனை முகவர், மோட்கேஜ் முகவர் மற்றும் தையல் வேலைகளுக்குப் பயன்படுத்தலாம். வாடகை விபரங்களை நேரில் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்.

மேலதிக விபரங்களுக்கு:-

விமல்:- 647 272 7019 பாலன் 416 451 5993



## வாகன விபத்தில் காயமடைந்துவிட்டீர்களா?

- சம்பள இழப்பீடுகள்
- வீட்டுப் பராமரிப்புச் செலவுகள்
- குழந்தை பராமரிப்புச் செலவுகள்
- கல்வி, வணிக இழப்புகள்
- மருத்துவச் செலவுகள்

போன்றவற்றை உத்தரவாதத்துடன் பெற்றுக்கொள்வதற்கு பலவருட அனுபவம் வாய்ந்த நம்பிக்கையான எம்மை நாடுங்கள்...



Wijay (Gobu) 416-885-2365

Kumar 416-732-9020 Cash Point



Able Accident Benefits

Group of Able Legal Services Inc.: 416-293-2111

4810 Sheppard Ave., E., Suite 207, Scarborough, ON., M1S 4N6



தயா (PK) கந்தையா BAS, ABR, AMP
Principal Broker / President
FSCO Lic # M 08001083

416-716-8707

# மோட்கேஜ் கிளினிக்

வோக் இன் - சனிக்கிழமை
9.00 - 5.00



நிஷாந்தன் சுவர்ணராஜா
Mortgage Agent

647-385-2710

மாதாந்த மோட்கேச் கொடுப்பனவுடன், கிறடிட் கார்ட், கார் லோன், பேசனல் லோன் ஆகிய அனைத்து கடன்களின் கொடுப்பனவுகளையும் செலுத்தமுடியாதுள்ளதே !

உங்கள் வீட்டுப்பெறுமதி அதிகரிப்பை பயன்படுத்தி, வீட்டை உறவுகளுக்கிடையிலோ அல்லது 3 ம் நபருக்கோ பெயர் மாற்றம் செய்து புதிய மோட்கேச் மூலம் அனைத்து கடன்களையும் ஒன்றாக்கி எவ்வாறு உங்கள் கடன் சுமையை குறைப்பது ?

**எனக்கு அவசரமாக $ 5,000 இலிருந்து $ 10,000 வரை கடன் தேவைப்படுகின்றதே !**
**எனது கிறடிட்டும் Bad ஆகிவிட்டதே ! ஏற்கனவே உள்ள எனது மோட்கேச்சினை பிரேக் பண்ணாது அவசரமாக தேவைப்படும் பணத்தினை கடனாக பெறுவது எப்படி ?**



CENTUM
Rapid Mortgages Inc.
றப்பிட் மோட்கேஜ்யஸ் இன்ங்

FSCO # 10156

211-80 Nashdene Road,
Scarborough, ON. M1V 5E4
Tel # 416-644-3555

** Interest rates are subject to change without notice. Rates are based on individual credit worthiness and income. Some other conditions may apply. Call for details.*

# உங்கள் வீட்டை வாங்குவதற்கு காத்திருக்காதீர்கள்!!

# உங்கள் வீட்டை வாங்கிவிட்டு காத்திருங்கள்!



**Utha Manickavasagar**
Sales Representative
(647) 282-8842

**Hanthan Manickavasagar**
Sales Representative
(416) 902-0065



**www.nest4rest.com**



rapid realty inc.®
Independently Owned and Operated Brokerage
T.416-259-2002 | F.888-559-2002 | www.rapidrealty.ca

210-80 Nashdene Road,
Scarborough, ON.
M1V 5E4

கட்டுரையாளர்:
தாயகத்தில் இருந்து
- யசீந்திரா -



# ஆட்சி மாற்றமும் தமிழ்மக்களின் பிரச்சனைகளுக்கான தீர்வும்

நடைபெறவுள்ள ஜனாதிபதி தேர்தலின் முதன்மையான இலக்கு மகிந்த ராஜபக்ச மூன்றாவது தடவையாகவும் அலரிமாளிகையில் அதிகாரம் செலுத்துவதை தடுப்பதாகும். இந்த ஒரு இலக்கிற்காகவே தென்னிலங்கையின் முரண்பட்ட சக்திகள் அனைத்தும் ஒன்றுபட்டிருக்கின்றன. கடந்தமுறை சரத் பொன்சேகாவின் ஊடாக மேற்கொள்ளப்பட்ட முயற்சி இம்முறை மைத்திரிபாலவை முன்னிறுத்தி மேற்கொள்ளப்படுகிறது. மைத்திரிபால தான் ஜனாதிபதியானால் நூறு நாட்களுக்குள் நிறைவேற்று ஜனாதிபதி முறையை இல்லாதொழிக்கவுள்ளதாக வாக்குறுதி அளித்திருக்கின்றார்.



அரசியல்வாதிகளின் தேர்தல் கால வாக்குறுதிகளை நம்பி எந்தவொரு தீர்மானத்திற்கும் வரமுடியாது. எனவே அதனை பொறுத்திருந்தே நோக்க வேண்டும். மேலும் இப்படியான வாக்குறுதிகள் இலங்கையின் வாக்காளர்களுக்கொன்றும் புதிதுமல்ல. தவிர நிறைவேற்று ஜனாதிபதி முறைமையை இல்லாதொழித்து விடுவதன் ஊடாக தமிழ் மக்களின் பிரச்சினையை தீர்த்துவிட முடியுமென்று நம்புவதும் கடினமான ஒன்றாகும்.

முன்னர் ஒருமுறை தனிப்பட்ட கலந்துரையாடல் ஒன்றின் போது சந்திரிக்கா தமாரதுங்க குறிப்பிட்டதாக ஒரு தகவலுண்டு. பிரச்சினை நபரல்ல, (அந்த நிறைவேற்றதிகார) கதிரை தான் பிரச்சினையாகும். உங்களின் சம்பந்தன் அந்த கதிரையில் இருந்தாலும் கூட இது தான் நடக்கும். முதலில் கதிரையை இல்லாமலாக்க வேண்டும். ஆனால் சந்திரிக்கா இரண்டு தடவைகள் தொடர்ச்சியாக அந்தக் கதிரையில் அமர்ந்திருந்தவர். ஆனால் அந்த கதிரையை அவரால் இல்லாதொழிக்க இயலவில்லை. ஜே.ஆர்.ஜெயவர்த்தனவால் உருவாக்கப்பட்ட அந்த கதிரையில் அமர்ந்திருந்த அனைவரும் அந்த கதிரையை முழுமையாக அனுபவிக்கவே விரும்பினர். எவரும் அதனை மாற்றியமைக்க முயலவில்லை. எனவே இந்த நிலையில் மைத்திரிபால அதனைச் செய்வார் என்பதை எவ்வாறு நம்ப முடியும்?

எனவே எதிரணியென்னும் பெயரில் ஒன்று பட்டுள்ள தென்னிலங்கை சக்திகள் அனைத்தும் அந்த கதிரையை இல்லாதொழிக்க முயற்சிக்கின்றனரோ இல்லையோ ஆனால் ராஜபக்சேக்களை இல்லாதொழிக்க வேண்டுமென்பதில் உறுதியாக இருக்கின்றனர்.

ராஜபக்சேக்களை இல்லாதொழிப்பதன் மூலமாகவே தங்களின் அரசியல் எதிர்காலம் உறுதிப்படுமென்று அவர்கள் நம்புகின்றனர். ஆனால் இந்த இடத்தில் தமிழ் மக்கள் கேட்கவேண்டிய கேள்விகள் என்ன? மைத்திரிபால அல்லது ரணில் விக்கிரமசிங்க தமிழ் மக்களின் அரசியல் எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றுவாரா? தென்னிலங்கையில் தமிழ் மக்களின் உரிமை தொடர்பில் உருவாக்கப்பட்டிருக்கும் நச்சு வளையத்தை இவர்களது ஆட்சியில் தகர்க்க முடியுமா?

இந்த கேள்விகளின் அடிப்படையில்தான் தமிழ் மக்கள் நடைபெறவுள்ள ஜனாதிபதி தேர்தலை எதிர்கொள்ள வேண்டும். ஏனெனில் தமிழ் மக்களின் அரசியல் அடித்தளமே இன்றைய தென்னிலங்கையின் கடும்போக்கில்தான் நிலைகொண்டிருக்கிறது. அந்த கடும் போக்கிற்கு ஆளும் மகிந்த ராஜபக்ச சர்வதேச சக்திகளுடன் முரண்பட்டு நிற்பது மட்டுமே ஒரேயொரு காரணமாகும். மகிந்தவின் கடும்போக்கை கருத்தில் கொண்டே தமிழர் விவகாரம் சர்வதேச அரங்கில் பேசுபொருளானது. இதனை இலங்கை வெளிவிவகார அமைச்சர் பீரிஸின் வார்த்தையில் கூறுவதானால் ஒவ்வொரு வருடமும் இலங்கை ஐக்கிய நாடுகள் சபையுடன் போராட வேண்டியிருக்கிறது. அதாவது, இலங்கை அரசாங்கம் நெருக்கடியில் இருக்கிறது. அந்த வகையில் நோக்கினால் நெருக்கடிகளிலிருந்து தப்புவதற்காக பல்வேறு விட்டுக் கொடுப்புக்களை செய்யவேண்டிய நிர்ப்பந்தம் இன்றைய அரசாங்கத்திற்கு நிச்சயம் ஏற்படும். நெருக்கடிகள் அதிகரிக்க அதிகரிக்க ஒரே கோட்டில் பயணிக்க முடியாது. அவ்வாறு பயணித்தால் அதன் இறுதி விளைவு அவர்களின் சர்வநாசமாகும். ஆளும் மகிந்த அரசாங்கம் இப்படியொரு நிலையில் தான் இருக்கிறது.

ஆனால் மகிந்த ராஜபக்சவின் இடத்தில் மைத்திரிபால அமர்ந்தால் நிலைமைகள் அனைத்தும் முற்றிலும் மாறிவிடும். சர்வதேச சக்திகளின் விருப்பங்களுக்கு ஏற்ப புதிய அரசாங்கம் நடந்து கொள்ளும் பட்சத்தில் இதுவரை இலங்கை தொடர்பில் நிலவிவந்த முரண்பாடுகள் அனைத்தும் காணாமல் போய் விடும். ஆனால் சிலர் வாதிடலாம் புதிய அரசாங்கம் ஆட்சி பொறுப்பை ஏற்றால் போர்க்குற்றச்சாட்டுக்கள் தொடர்பான சர்வதேச விசாரணைகளுக்கு ஒத்துழைப்பு வழங்கும் அதன் மூலம் குற்றவாளிகள் தண்டிக்கப்பட வாய்ப்புண்டு. இதற்கான வாய்ப்பு மிகவும் குறைவாகவே காணப்படுகிறது. அப்படியே குற்றவாளிகள் தண்டிக்கப்படுவார்கள் என்று வைத்துக் கொண்டாலும் கூட அவர்களுக்கு வழங்கும் தண்டனை தமிழ் மக்களுக்கான அரசியல் தீர்வில் எந்தவொரு தாக்கத்தையும் ஏற்படுத்தாது. அது வெறுமனே மனித உரிமை மீறலுக்கான தண்டனை என்னும் அளவில் மட்டுமே கவனிப்பை பெறும்.

இங்கு பிறிதொரு விடயத்தையும் தமிழர்கள் கவனிக்க வேண்டும். விடுதலைப் புலிகளுக்கு எதிரான இறுதி யுத்தத்தை வழிநடத்திய இராணுவத் தளபதியான பொன்சேகா தற்போது எதிரணியில் இருக்கிறார். இறுதி யுத்தத்தில் இடம் பெற்ற போர்க்குற்றங்கள் மற்றும் மனித குலத்திற்கு எதிரான குற்றச்சாட்டுக்கள் நிரூபிக்கப்பட்டால் அதற்கான தண்டனையை பெறுபவர்களில் நிச்சயம் பொன்சேகாவும் இருப்பார்.

எனவே பொன்சேகாவையும் புதிய அரசாங்கம் சர்வதேச விசாரணைக்கு உட்படுத்த அனுமதிக்குமா? எனவே ஆட்சி மாறினாலும் கூட இலங்கை இராணுவத்திற்கு எதிரான குற்றச்சாட்டுக்களை புதிய அரசாங்கமும் ஏற்கப் போவதில்லை. வேண்டுமானால் உள்நாட்டிற்குள் ஒரு நம்பகமான விசாரணையை செய்யப்போவதாக புதியதொரு வாக்குறுதியை வழங்கி அதற்கான சில நடவடிக்கைகளையும் எடுக்கக் கூடும். மைத்திரிபால தான் அதிகாரத்திற்கு வந்தால் நல்லிணக்க ஆணைக்குழுவின் பரிந்துரைகளை அமுல்படுத்துவேன் என்று குறிப்பிட்டிருப்பது இத்தகையதொரு பின்னணியை கொண்டதென்றே நான் கருதுகிறேன். ஆட்சி மாற்றத்தின் பின்னர் மீண்டும் விடயங்கள் அனைத்தும் ஆரம்பத்திலிருந்து உச்சரிக்கப்படும். பிறிதொரு விடயத்தையும் இந்த இடத்தில் தமிழர்கள் கருத்தில்கொள்ள வேண்டியிருக்கிறது. தென்னிலங்கையில் ஆட்சி மாற்றம் தொடர்பான விவாதங்களில் எங்குமே தமிழர் பிரச்சினை ஒரு விடயமாக நோக்கப்பட்டிருக்கவில்லை. அதனை பின்னர் பார்த்துக் கொள்வோம் என்றவாறானதொரு கருத்தே எல்லோராலும் உச்சரிக்கப்படுகிறது. இன்றைய சூழலில் தமிழர் விவகாரம் தொடர்பில் வெளிப்படையாக பேசினால், தென்னிலங்கையின் இனவாத சக்திகளுக்கு அது வாய்ப்பாகி விடும், எனவே அதனை இப்போது பேசுவது உசிதமானதல்ல என்பதே எதிரணித் தரப்பினரது மறைமுக வாதமாக இருக்கிறது. தமிழர் தரப்பிலும் அப்படியொரு பார்வையுண்டு. ஆனால் தமிழர் பிரச்சினையை வெளிப்படையாக பேச முடியாதென்று கூறும் அனைவரும் தமிழ் மக்களின் வாக்குகள் தங்களுக்கு கிடைக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருக்கின்றனர்.

அதாவது தமிழர்களின் வாக்குகள் தேவை ஆனால் அவர்களின் பிரச்சினை தேவையில்லை.

இந்த இடத்தில் எழும் கேள்வி, தமிழ் மக்களின் பிரச்சினைகளை வெளிப்படையாக ஏற்றுக் கொள்ள முடியாத

(36ம் பக்கம் பார்க்க)

The Royal Feet
The Royal Feet
on Sun City Plaza!
Custom made orthotics, orthopedic shoes, compression stockings, massage (RMT), acupuncture, osteopath, all services and much more.
உங்கள் பாதங்களுக்கு ஏற்றபடி செய்யப்பட்ட ஆர்தொடிக்ஸ் காலணிகள் - எலும்பியல் காலணிகள்
அழுத்தம் தரும் காலுறைகள் - மசாஜ் (RMT) குத்தூசி,
எலும்பு நோயாளர்களுக்கு அனைத்து சேவைகளும் மற்றும் பல சேவைகளும்
Foot Pain
Ankle Pain
Knee Pain
ஆர்தோடிக்ஸ் ஒரு சோடி காலணி வாங்கினால்
(சில நிபந்தனைகளுடன்) ஒரு சோடி காலணி கிடைக்கும்.
புதிய வாடிக்கையாளர்களுக்கு விலைக்கழிவு உண்டு
(உங்களிடம் காப்புறுதி இல்லா விட்டாலும் விலைக்கழிவு உண்டு)
physiotherapy
(we accept new patients).
நாம் அனைத்து
Benefitsகளையும் ஏற்போம்!
2761 Markham rd., unit D-34,
Scarborough ON M1X 0A4
Phone 416-298-3003
Fax 416-298-3004
Email: theroyalfeet@gmail.com
Web: www.theroyalfeet.com

# ஐரோப்பிய சட்டத்துறையில் பரிஸ்ரர் பட்டம் பிரான்ஸ் தமிழ் மாணவியின் உயர் சாதனை

உலகின் முன்னணி பல்கலைக்கழகங்களில் ஒன்றான Paris-Sorbonne University இன் இவ்வாண்டிற்கான புலமைசார் உயர் கல்வியை (Professional Higher Studies) நிறைவு செய்து சட்டத்துறையின் மனித உரிமைகள் சார் (Human Rights) பரிஸ்ரர் பட்டம் பெற்றுள்ளார் பிரான்சின் தமிழ் மாணவி ஒருவர்.

Pontoise நகரில் வசிக்கும் செல்வி. ஆன் குகநாதன் என்கின்ற மாணவியே டீயசசளைவநச தகமையுடன் ஐரோப்பிய சட்டத்துறைக்குள் நுழைகிறார்.

அண்மைய காலங்களில் புலம்பெயர் தமிழ் சமூகத்தின் இளையவர்கள் தாம் வாழும் நாடுகளையும் தாண்டி சர்வ தேச அளவில் கல்வித் தகமைகளில் மேம்பட்டு சாதனை படைத்து வருகிறார்கள்.

இனம்-மதம்-சாதி-பால் என ஒரு வட்டத்தினுள் அடங்கி விட்ட எமது தலைமுறையின் சிந்தனைகளை உடைத்தெறிந்து மாற்றம் காணும் இன்றைய உலகத்துடன் நம் எதிர்கால சமூகமும் இணைந்து வருவதை மகிழ்வுடன் அனைவரும் எதிர் கொள்ள வேண்டும். அவர்களது சாதனைகளை வாழ்த்தி வரவேற்க வேண்டும், இதன் மூலம் எனைய மாணவ சமூகம் ஊக்குவிக்கப்பட வேண்டும்.

இலங்கை வரலாற்றில் மருத்துவம், பொறியியல், கணக்கியல், சட்டம் போன்ற துறைகளில் அதி உயர் பட்டமும் பாண்டித்தியமும் பெற்று புகழடைந்தவர்கள் கூடுதலாக ஆண்களாகவே இருந்தனர் 1960-1970 காலப்பகுதிகளில்.

குறிப்பாக சட்டத்துறையில் அன்றைய காலங்களில் பரிஸ்றர் (Barrister) கியூ.சி (Quen Council ) போன்ற உயர் தகைமைகளை பெற்று இலங்கையின் நீதித் துறை வரலாற்றில் இடம் பிடித்தவர்கள் ஒரு சிலராக அதுவும் ஆண்களாகத் தான் இருந்தார்கள்.

இந்த வரிசையில் திருவாளர்கள் ஜீ.ஜீ. பொன்னம்பலம் எம்.திருச்செல்வம்,எஸ்.ஜே.வி.செல்வநாயகம், கொல்வின் ஆர் டி சில்வா, பீற்றர் கெனமன், திஸ்ஸ விஜயறட்ணே,மு.சிவசிதம்பரம், சி.கதிரவேற்பிள்ளை, காமினி அத்துக் கொறள இப்படி சிலரை மட்டுமே சொல்லலாம்.

இந்த நிலைமைகள் மாற்றப்பட்டு இன்றைய இளம் சமூகம் குறிப்பாக புலம் பெயர் இளையோர் கல்வியில் மட்டுமல்ல அனைத்து ஆரோக்கியமான துறைகளிலும் சாதனை படைத்து வருகிறார்கள் பாகுபாடின்றி.

இதன் தொடர்ச்சியாக தனது 24வது வயதில் பரிஸ்றர் தகைமையுடனான ஒரு சட்டத்தரணியாக ஐரொப்பிய சட்டப் பரப்பில் வலம் வரவுள்ள செல்வி ஆன் குகநாதனை நாமும் வாழத்தி வரவேற்போம்.

இவர் புலம்பெயர் தமிழ்ஊடகத் துறையின் ஆரம்ப கர்த்தாவும் டான் தொலைக்காட்சி நிறுவனத்தின் ஸ்தாபக இயக்குனருமான திரு எஸ்.எஸ். குகநாதன்-ரஜனி தம்பதிகளின் புதல்வி என்பது குறிப்பிடத்தக்கது.

**– கோவை நந்தன்**

# இறந்ததாகக் கருதப்பட்ட தமிழர் 25 வருடங்களின் பின் வீடு திரும்பினார்



யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த தமிழர் ஒருவர் இறந்து விட்டதாக கருதப்பட்ட நிலையில் 25 வருடங்களுக்கு பின்னர் வீடு திரும்பியுள்ளார்.

யாழ்ப்பாணம் சுன்னாகத்தை சேர்ந்த வைரவநாதன் என்பவரே இவ்வாறு வீடு திரும்பியவாரார்.

1990ஆம் ஆண்டு கொழும்பில் இடம் பெற்ற குண்டு வெடிப்பு சம்பவத்தை அடுத்து ஆமர் வீதியில் வைத்து சந்தேகத்தின் பேரில் வைரவநாதன் கைது செய்யப்பட்டார். அப்போது அவருக்கு வயது 25.

இதன்பின்னர் அவர் காணாமல் போனவர் என்ற அடிப்படையில் தேடப்பட்டு பின்னர் இறந்து விட்டதாகவே கருதப்பட்டார். இந்தக் காலத்துக்குள் வைரவநாதனின் பெற்றோர் இருவரும் காலமாகி விட்டனர்.

கடந்த மாதம் ஹம்பாந்தோட்டை நீதிவான் நீதிமன்றத்தில் இருந்து வீட்டுக்கு அனுப்பப்பட்ட கடிதத்தில் ஹம்பாந்தோட்டை சிறைச்சாலையில் தடுத்து வைக்கப்பட்டிருந்த வைரவநாதன், விடுதலை செய்யப்பட்டுள்ளதாகவும் அவரை பொறுப்பேற்குமாறும் கேட்கப்பட்டிருந்தது. எனினும் அவரின் உறவினர்கள், வைரவநாதனை பொறுப்பேற்க ஹம்பாந்தோட்டைக்கு செல்லவில்லை.

கொழும்பின் ஆங்கில இதழ் ஒன்றின் தகவல்படி வைரவநாதன் இறந்து விட்டார் என்று கருதி போலி ஆவணங்கள் தயாரிக்கப்பட்டு அவரின் சொத்துக்கள் அபகரிக்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்தநிலையில் வைரவநாதனின் மற்றுமொரு உறவினர் ஹம்பாந்தோட்டைக்கு சென்று வைரவநாதனை பொறுப்பேற்றுள்ளார். அவரை கடந்த வியாழக்கிழமை ஊருக்கு அழைத்துச் சென்றுள்ளார்.


TBC Toronto Business College

கணக்கியல் கல்வியில் ஓர் முதன்மை நிறுவனம்



DIPLOMA PROGRAMS

ACCOUNTING & PAYROLL ADMIN.
(Co-op available)
35 Weeks

BUSINESS ADMINISTRATION
26 Weeks

COMPUTERIZED ACCOUNTING
26 Weeks




FOOD SERVICE WORKER (FSW)
(Co-op available)
12 Weeks

MEDICAL OFFICE ADMIN.(MOA)
32 Weeks

PERSONAL SUPPORT WORKER(PSW)
26 Weeks (NACC Diploma )

FREE TRAINING

யார் தகுதி உடையவர்கள் ?

★ EI பெற்றுக்கொண்டிருப்பவர்கள்
★ 2005ம் ஆண்டுக்குப்பின் EI பெற்றவர்கள்
★ 5 வருடங்களுக்குள் Maternity / Parental Benefits பெற்றவர்கள் Diploma

பாடநெறி ஒன்றை இலவசமாகக்கற்கலாம்
Tuition Fees,Books,Living Expenses
Day care & Transportation up to $28000
அனைத்தும் இலவசம்

PART TIME COURSES

Enrol for one course and get another one for
FREE

Windows, Word, Excel, Power Point, Access, Quick Books, Simply Accounting & Accpac

• 100% Instructor Led Training • Small Class Sizes
• Student Friendly Environment • Ample Free Parking
• Professional & Experienced Staff • TTC Accessible
• Career Planning & Counselling

416-291-5155 / 416-451-6680

4465 Sheppard Ave. East #208
( Sheppard & Brimley ) Scarborough
www.tbcollege.com info@tbcollege.com
(Registered as a Private Career College under the Private Career Colleges Act 2005)

# ஆட்சி மாற்றத்தை ஆதரிக்கிறதா அமெரிக்கா?

**கட்டுரையாளர்: ஹரிகரன்**
(ஓய்வு பெற்ற இந்திய இராணுவக் கேணல்
பிராந்திய அரசியல் ஆய்வாளர்)



நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்துவதற்கு வெளி நாடுகள் முயற்சி செய்வதாக மீண்டும் தேர்தல் பிரசார மேடைகளில் குற்றச்சாட்டுகள் எழுப்பப் பட்டு வருகின்றன.

அமெரிக்கத் தூதுவராக கொழும்பில் பணியாற்றிய மிச்சேல் ஜே சிசன் தனக்கு சலுகைகளை வழங்க முன் வந்ததாக அமைச்சர் குணரத்ன வீரக்



கோன் பகிரங்கமாக குற்றச் சாட்டை முன் வைத்திருந்தார்.

கடந்த வாரம் வெலிக்கந்தையில் உள்ள கிழக்குப் படைகளின் தலைமையகத்தில் இராணுவத்தினர் மத்தியில் உரையாற்றிய இராணுவத் தளபதி லெப்.ஜெனரல் தயாரத்நாயக்கவும் வெளி நாட்டு சக்திகள் இலங்கையில் குழப்பத்தை ஏற்படுத்த முனைவதாக குற்றம் சாட்டியிருந்தார்.

அமைச்சர்கள் கெஹலிய ரமபுக்வெலடலஸ் அழகப் பெரும போன்றவர்களும் வெளி நாட்டு சக்திகள் குழப்பம் விளைவிக்க முனைவதாகவும் லிபியாவில் ஏற்பட்ட நிலையை இலங்கையில் அனுமதிக்க முடியாது என்றும் தெரிவித்து வருகின்றனர்.

ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ச அனுராதபுரத்தில் நடந்த தனது முதலாவது பிரசாரக் கூட்டத்திலும் வெளிநாட்டுச் சதி, போர்க் குற்றங்கள், போன்றவற்றுக்குத் தான் முக்கியத்துவம் அளித்திருந்தார்.

வெளி விவகார அமைச்சர் ஜி.எல்.பீரிஸும் கூட இதே குற்றச் சாட்டுகளை வெளியிட்டு வருகின்றார்.

இலங்கையில் குழப்பத்தை ஏறபடுத்த வெளிநாடுகள் முனைவதாக இவர்கள் எல்லோரும் சுமத்தும் குற்றச் சாட்டின் அடிப்படையாக இருப்பது மேற்கு நாடுகள் தான்.

குறிப்பாக அமெரிக்காவும், அதன் நட்பு நாடுகளும் தான் இலங்கையில் குழப்பத்தை ஏற்படுத்த முனைவதாக இவர்கள் கூற முனைகின்றனர்.

சாதாரண சிங்கள மக்களை பொறுத்த வரையில் இந்தக் குற்றச் சாட்டுகளின் உண்மைத் தன்மை பற்றியோ அதன் மீது எழுகின்ற சந்தேகங்கள் குறித்தோ விளங்கிக் கொள்ளும் நிலையில் இருப்பார்கள் என்று கருத முடியவில்லை. அதனைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டே அரச தரப்பிலுள்ளவர்கள் இந்தக் குற்றச்சாட்டை தொடர்ச்சி யாக முன் வைத்து வருகின்றனர்.

இலங்கையில் குழப்பத்தை ஏற்படுத்துவதால் மேற்குலக நாடுகள் எத்தகைய அனுகூலத்தைப் பெற முனைகின்றன? என்று முதலில் பார்க்க வேண்டும்.

அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் தாம் மேற்குலக நாடுகளின் அழுத்தங்களுக்கு அடி பணியவில்லை என்ற ஒரே காரணத்துக்காகவே தம்மைப் பழி வாங்க முனைவதாக நியாயம் கூற முனைகிறது. அமெரிக்கா போன்ற நாடுகள் தமக்கு வசதியான தம்முடன் நெருக்கமானவர்கள் ஆட்சியில் அமர்வதை விரும்புவது அதற்காக ஆட்சிக்கவிழ்ப்புகளை மேற் கொள்வது வழக்கமே.

எனினும் இலங்கையைப் பொறுத்த வரையில் ஆட்சியைக் கவிழ்க்க முனையும் அளவுக்கு அமெரிக்காவிடமிருந்து இலங்கை ஒன்றும் அவ்வளவு் தூர விலகிச் சென்று விடவில்லை.

முன்னர் லிபியாவில் கடாபி அரசாங்கமும் ஈராக்கில் சதாம் ஹுசேன் அரசாங்கமும் அமெரிக்காவிடம் இருந்து விலகி நின்றது போன்ற நிலையில் இலங்கை இல்லை.

ஏன் இப்போது வடகொரியா சிரியா, வெனிசூலா போன்ற நாடுகள் அமெரிக்காவுடன் முரண்படுவது போன்றும் இலங்கைக்கும் அமெரிக்காவுக்கும் முரண்பாடுகள் இல்லை.

இலங்கையுடன் அமெரிக்கா மிக நெருக்கமான உறவுகளையே வைத்துக் கொண்டுள்ளது. அண்மையில் கூட வர்த்தக உறவு களைப் பலப்படுத்திக் கொள்வதற்கு இரு நாடுகளும் இணக்கம் கண்டுள்ளன.

மனித உரிமைகள் விவகாரம் தவிர்ந்து மற்றெல்லா விடயங்களிலும் அமெரிக்காவுக்கும் இலங்கைக்கும் இடையிலான உறவுகளில் எந்த இடை வெளியும் கிடையாது. இலங்கையுடன் மேலும் உறவுகளைப் பலப்படுத்திக் கொள்ளவே விரும்புவதாகவும் மனித உரிமை விவகாரங்களில் முன்னேற்றம் காணப்பட்டால் தான் அது சாத்தியமாகும் என்றும் அமெரிக்க இராஜாங்கத் திணைக்களம் அண்மையில் கூட மிகத் தெளிவாகக் கூறியிருந்தது.

அத்துடன் இலங்கையில் ஆட்சி மாற்றத்தை ஏற்படுத்த அரிக்கா முனையவில்லை என்றும் கூட சில மாதங்களுக்கு முன்னர் கூறியிருந்தது.

ஆனால் இலங்கை அரசாங்கமோ அமெரிக்காவுடன் வலிந்து வம்புக்குப் போவதும் அமெரிக்கா தான் நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்த முனைவது போல கருத்துக்களை வெளியிடுவதுமாக இருக்கிறது. லிபியாவில் ஏற்பட்ட நிலையை இலங்கையிலும் ஏற்படுத்த முனைவதாகவும் பூதாகாரப் படுத்தி வருகிறது.

ஆட்சியை மாற்றுவதற்காகவும் அரச தரப்பில் இருப்போரை எதிரணிக்கு இழுப்பதற்காக மில்லியன் கணக்கான டொலர்கள் எதிரணிக்கு கிடைத்திருப்பதாகவும் கூடப் பிரசாரம் செய்யப்படுகிறது. அமெரிக்கா ஆட்சிக் கவிழ்ப்புக்கான முயற்சிகளில் இறங்கினால் இலங்கை போன்றதொரு நாட்டினால் அதை எதிர் கொள்வது ஒன்றும் சுலபமான காரியமாக இருக்காது. அமெரிக்காவைப் பொறுத்த வரையில் இலங்கை அரசாங்கம் மனித உரிமை விவகாரங்களில் ஒத்துழைக்கவில்லை என்பதை தவிர தனது நலன்களை அடையும் விடயங்களில் எந்தப் பாதிப்பையும் எதிர் கொள்ளவில்லை.

அமெரிக்காவின் நலன்களுக்கு பாதிப்பு ஏற்படும் நிலை ஏற்பட்டால் தான் அடுத்த கட்டம் குறித்து அது சிந்திக்க முற்படும். அத்தகையதொரு நிலை இலங்கையில் ஏற்பட்டிருக்கிறது என்று கருதுவதற்கில்லை.

அதே வேளை மேற்கு நாடுகள் மீண்டும் புலிகளுக்கு உயிர் கொடுக்க முனைவதாகவும் அதற்காகவே ஆட்சியை மாற்ற முனைவதாகவும் கூட அரசாங்கம் பிரசாரம் செய்து வருகிறது.

இலங்கையில் அமைதி ஏற்பட வேண்டும் என்பதற்காகவே விடுதலைப் புலிகளை அழிப்பதற்கு அமெரிக்காவும் மேற்குலக நாடுகளும் போரை முடிவுக்குக் கொண்டு வருவதற்கு உதவிகளை செய்தன. அமெரிக்காவும் மேற்கு நாடுகளும் உதவியிருக்காது போயிருந்தால் இது சாத்தியமாகி இருக்காது.

புலிகளை தடை செய்தும் அவர்களின் நிதி மற்றும் ஆயுதக் கொள்வனவு வலையமைப்புகளை முடக்கியும் புலி களின் ஆயுத விநியோக கப்பல்கள் குறித்த தகவல்களைக் கொடுத்தும் கடற்படையை வலுப்படுத்த சமுத்ர என்ற போர்க் கப்பலைக் கொடுத்தும் அமெரிக்காவும் மேற்கு லகமும் போரை முடிவுக்குக் கொண்டு வருவதில் முக்கிய பங்காற்றியிருந்தன.

இந்த ஆதரவு அரசாங்கத்துக்கு கிடைத்திருக்காது போயிருந்தால் சீனாவினதோ பாகிஸ்தானினதோ உதவிகளை வைத்துக் கொண்டு இலங்கை அரசாங்கத்தினால் புலிகளுக்கு எதிரான போரை முடிவுக்குக் கொண்டு வந்திருக்க முடியாது.

(32ம் பக்கம் பார்க்க)

Mortgage Alliance Access Inc.
209 - 8130 Sheppard Avenue East
Toronto. ON M1B3W3
Office: 416-646-8849
MORTGAGE ALLIANCE
Access Inc.
Independantly Owned & Operated
Lic: 11404
For All Your Mortgage Needs...

Rajesh Srisubramaniam
Mortgage Agent
Call: 416 877 3599
www.mortgagealliance.com/accessinc

APARTMENTS AVAILABLE
BACH, 1BDR, 2BDR, & 3BDR
Specious & Clean Apartments throughout Toronto Area
Tel: 416-902-0314

FULLY RENOVATED KITCHEN & BATHROOM
CLOSE TO BUS SERVICE, SCHOOLS
AND SHOPPING MALLS
Scarborough
Morningside & Lawrence

# ஆழிப் பேரலையின் 10வது ஆண்டு நினைவு

புத்தாண்டின் விடுமுறைக் காலத்தை நெருங்கும் இவ்வேளையில் 10 ஆண்டுகளுக்கு முன் ஆசியாவைப் பேரழிவுக்கு இட்டுச் சென்ற 2004ஆம் ஆண்டு ஆழிப்பேரலை தந்த இழப்புகளின் வடு கனடியத் தமிழர் உள்ளங்களில் இன்றும் மாறாமல் இருக்கிறது.

டிசம்பர் 26ஆம் நாள் இரண்டரை இலட்சத்துக்கும் அதிகமான மக்களைப் பலிகொண்ட இந்த ஆழிப்பேரலை இருபது இலட்சத்துக்கும் அதிகமானோரை உடமைகள் இழந்து ஏதிலியராக்கியது. 10ஆவது ஆண்டை நினைவு கூருமுகமாக கனடியத் தமிழர் பேரவை ஏனைய சமுக அமைப்புகளோடு இணைந்து நிகழ்வொன்றை ஏற்பாடு செய்துள்ளது.

நாள்: Friday December 26th, 2014 from 2:00 pm to 4 pm

இடம்: JC's Banquet & Grill House
1686 Ellesmere Road
Toronto - Ontario M1H 2V5

நுழைவு: கட்டணம் இல்லை

பெரிதும் பாதிக்கப்பட்ட பல்லின மக்களை இணைத்து நினைவு கூரப்படும் இந்த முக்கிய நிகழ்வில் அனைவரையும் பங்கேற்குமாறு அன்புடன் அழைக்கிறோம்.

# பாலா அண்ணாவிடம் இருந்து ஈழத்தமிழர் தேசம் கற்றுக் கொள்ளக் கூடியவை

(27ம் பக்கத்தொடர்ச்சி) பாலா அண்ணாவின் இந்த அணுகுமுறை இவருக்கு அனைத்துலக இராஜதந்திரிகள் மத்தியில் நற்பெயரையும் மதிப்பையும் வளர்த்திருந்தது. பாலாஅண்ணாவின் இறுதி மரியாதை நிகழ்வில் பாலசிங்கம் தம்மிடம் பொய் சொன்னதில்லை என எரிக் சூல்கெய்ம் அவரை விதந்துரைத்திருந்தார்.

மூன்றாவது பாலா அண்ணாவிடம் இருந்த எதிர்காலத்தில் நடைபெறப் போவதை முன்கூட்டியே உய்த்துணரும் ஆற்றல் தமிழர் தேசம் அவரிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டியதொன்று.

2002 ஆம் ஆண்டின் பின் மீண்டும் சண்டைப்பாதைக்கு என்ன காரணத்துக்காகவும் திருப்பினால் எல்லாரும் சேர்ந்து இயக்கத்தை அழித்து விடுவார்கள் என்பதனை பாலா அண்ணா உய்த்துணர்ந்திருந்தார். இயக்கத்தை மட்டுமல்ல மக்களையும் பெரும் தொகையில் கொன்று குவிப்பார்கள் என்றும் அவர் அஞ்சினார்.

இதனால் இயக்கம் மீண்டும் சண்டைப் பாதைக்குத் திரும்பாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தன்னால் இயன்ற சகல முயற்சிகளையும் செய்து பாரத்தார். இயக்கத்தை அழிக்கும் நடவடிக்கை எவ்வாறு நிகழும் என்பதனைக் கூட அவர் இயக்கத்துக்கு எடுத்துச் சொல்லியிருந்தார்.

பாலா அண்ணா காலம் ஆகிய பின்னர் இயக்கத்தக்கு எதிரான நடவடிக்கை தீவிரமாகி இயக்கம் பின்வாங்கிக் கொண்டிருக்கும் போது ஒரு முக்கிய தளபதி சொன்னாராம்.

பாலா அண்ணா அப்ப சொன்னது இப்ப நடக்குது

நான்காவது இராஜதந்திரப் பணியென்பது அர்ப்பணிப்பு மிக்க வாழ்வுடன் மேற்கொள்ளப்பட வேண்டியதொன்று என்பது.

பிரித்தானியாவில் குடியுரிமை கொண்டிருந்த பாலா அண்ணா மிகவும் நோய் வாய்ப்படும் வரை தாயகத்தில் மக்களுடன் அர்ப்பணிப்புடன் தான் தனது வாழ்வை மேற்கொண்டிருந்தார்.

அவரும் அடேல் அன்ரியும் போராட்டப் பணிகளில் ஈடுபட வேண்டும் என்பதற்காக தமக்கு குழந்தை வேண்டாம் என்ற முடிவினை எடுத்திருந்தார்கள். இவர்கள் தமது வாழ்வை அமைத்திருந்த முறையில் இருந்தும் ஈழத் தமிழர் தேசம் கற்றுக் கொள்ள வேண்டியுள்ளது.

# மகாஜனக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் கனடா நடாத்தும் வெள்ளிவிழா ஆண்டின் வருடாந்தப் பொதுக்கூட்டமும் இராப்போசனமும்

மகாஜனக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் கனடா நடத்தும் வெள்ளிவிழா ஆண்டின் வருடாந்த பொதுக்கூட்டமும் இராப்போசன விருந்தும் எதிர்வரும் December 27, 2014 சனிக்கிழமை மாலை 6.00 மணிக்கு

**Ellesmere Community Center**

**20 Canadian Rd - Toronto - ON M1R 4B4**

**(Warden Ave & Ellesmere Road)** இல் நடைபெறும். அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்

***தொடர்புகளுக்கு: ஜெயேந்திரன் 416 705 1493***

***சிவ கௌரிபாலன் 416 451 8427 குரு அரவிந்தன் 905 861 9323***

# பொதுபலசேனாவின் நிறைவேற்று அதிகாரி மைத்திரிக்கு ஆதரவு

பொதுபல சேனா அமைப்பின் நிறைவேற்று அதிகாரி டிலாந்த விதானகே அந்த அமைப்பில் இருந்து விலகி பொது வேட்பாளர் மைத்திரிபால சிறிசேனவுக்கு ஆதரவு வழங்க உள்ளதாக அதன் உட்தரப்பு வட்டாரங்கள் தெரிவித்தன. பொதுபல சேனா அமைப்பும் அதன் செயலாளர் கலகொட அத்தே ஞானசார தேரரும் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷவுக்கு ஆதரவு வழங்கும் கொள்கைக்கு மாறியுள்ளதால் அந்த அமைப்பின் உறுப்பினர்களும் ஆதரவாளர்களும் அமைப்பை கைவிட்டுள்ளனர். அத்துடன் பொதுபல சேனாவின் ஆதரவை பெற்றுள்ளமை காரணமாக அரசாங்கத்திற்கு ஆதரவு வழங்கி வரும் சிறுபான்மை இன கட்சிகள் தமது எதிர்ப்பை வெளியிட்டுள்ளன.

இவ்வாறான நிலைமையில் ஊடக சந்திப்புகளின் போது ஜனாதிபதித் தேர்தல் சம்பந்தமான கருத்துக்களை வெளியிடக் கூடாது என பாதுகாப்புச் செயலாளர் கோத்தபாய ராஜபக்ஷ பொதுபல சேனா அமைப்புக்கு அறிவித்துள்ளதாக தகவல்கள் தெரிவிக்கின்றன. இதனிடையே டிலாந்த விதானகே எதிர்க்கட்சிகளின் பொது வேட்பாளருக்கு ஆதரவு வழங்குவது தொடர்பில் எதிர்க்கட்சியின் தலைவர் ஒருவருடன் பேச்சுவார்த்தைகளை நடத்தியுள்ளதாக கூறப்படுகிறது.





Computek College
BUSINESS · HEALTH CARE · TECHNOLOGY
REGISTERED AS A PRIVATE CAREER COLLEGE UNDER THE PRIVATE CAREER COLLEGES ACT, 2005

FREE LAPTOP
When you enroll in a DIPLOMA COURSE
Offer valid until Jan 31, 2015
Some conditions apply

COMPUTEK DIPLOMA COURSES

| | |
|---|---|
| Enterprise Network Engineering | 50 wks |
| Community Services Worker | 50 wks |
| Int. Application Development | 50 wks |
| Early Childcare Assistant | 38 wks |
| Personal Support Worker | 32 wks |
| Accounting & Payroll Admin | 35 wks |
| Medical Office Admin | 28 wks |
| Network Engineering | 35 wks |
| Computerized Accounting | 26 wks |
| Business Administration | 26 wks |

NOW ACCEPTING INTERNATIONAL STUDENTS
Computek College is approved as a Designated Learning Institution (DLI) by Citizenship and Immigration Canada (CIC)

LAID OFF OR UNEMPLOYED?
Second Career and other funding options available for those who qualify. Call for details.

GET INTO MEDICAL SCHOOL
*SPECIAL SEMINAR
DEC 27
Learn MMI interview skills
The most important interview of your future needs preparation
SEATS ARE LIMITED! CALL FOR DETAILS
*These programs do not require approval under the Private Career College Act, 2005

TORONTO CAMPUS 416.321.9911 (KENNEDY/SHEPPARD)
MARKHAM CAMPUS 905.471.3344 (MARKHAM/STEELES)
SCARBOROUGH CAMPUS 416.285.9941 (KENNEDY/EGLINTON)

WWW.COMPUTEK.EDU

# நாங்கள் வீடுகளுக்குச் செல்வதைத் தடுத்தவர்களை வீட்டுக்கு அனுப்புவோம்

தேர்தல்கள் நடைபெறுவது இலங்கையில் மிகச் சாதாரண நிகழ்வாகக் காணப்பட்ட போதும் நடைபெறப் போகும் ஜனாதிபதி தேர்தலானது வரலாற்றில் என்றுமில்லாத அளவுக்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பலத்த எதிர்பார்ப்பினை ஏற்படுத்தியுள்ளது. யுத்த வெற்றியின் பின்னர் உள்நாட்டில் தேர்தல்களில் அசைக்க முடியாத தலைவராக ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச தொடர்ந்தும் வலம் வந்தார். ஊவா மாகாண சபைத்தேர்தலில் ஆளும் கட்சியின் வாக்கு வீதத்தில் ஏற்பட்ட சரிவு யுத்த வெற்றியினை விட மக்களின் வாழ்க்கைச் செலவு அதிகரிப்பு அடுத்த தேர்தல்களில் செல்வாக்குச் செலுத்தப்போகின்றது என்பதனை நன்றாக உணர்ந்து கொள்ள வைத்தது. இதனாலேயே ஜனாதிபதி தனது பதவிக்காலம் முடியும் முன்னர் தேர்தலினை நடாத்தத் துணிந்தார்.




யுத்தம் முடிவடைந்த பின்னர் உறுதியான அபிவிருத்திப்பாதையில் நாட்டினை இட்டுச் செல்வதற்கு புரையோடிப்போயுள்ள இனப்பிரச்சினைக்கு நிரந்தர தீர்வினைக் காணுதல், உண்மையான இன நல்லிணக்கத்தினை ஏற்படுத்துதல், யுத்தத்தினால் மிகவும் மோசமாகப் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களின் வாழ்வாதாரத்தினை விரைவாகக் கட்டியெழுப்புதல், தடுப்புக்காவலில் சந்தேகத்தின் பேரில் தடுத்து வைக்கப்பட்டுள்ளவர்களை பொது மன்னிப்பின் கீழ் விடுதலை செய்தல் போன்றவற்றினை செய்வதற்கான அத்தனை வாய்ப்புக்களும் காணப்பட்ட போதும் இவை அனைத்திற்கும் மாறாக நில ஆக்கிரமிப்புக்கள் இராணுவ மயமாக்கம், வடமாகாண சபைக்கு அதிகாரங்களை வழங்காமல் முரண்டு பிடித்தல், பொதுபல சேனா போன்ற கடும்போக்குவாத அமைப்புக்களை கட்டுப்படுத்தாமல் முஸ்லிம் மக்களையும் தேசிய அரசியலிலிருந்து அந்நியப்படுத்துவதற்கு வழிவகுத்தல் போன்றவற்றின் மூலம் சிங்கள மக்களை ஓரணியில் திரட்டி தேர்தல்களை வெற்றி கொள்வதே அரசின் மூலோபாயமாகக் காணப்பட்டது.

ஆனால் ஊழல், அதிகார துஸ்பிரயோகம், ஜனநாயக உரிமை மீறல்கள், நல்லாட்சிச் செயன்முறை தொடர்ந்தும் அச்சுறுத்தலுக்கு உள்ளாகிக் கொண்டிருந்தமை, கல்வி, சுகாதாரம் போன்ற முக்கிய துறைகள் அரசின் அபிவிருத்தி நிகழ்ச்சி நிரலில் முக்கிய துறைகளாக உள்ளடக்கப்படாமை போன்ற காரணங்கள் சிங்கள மக்கள் மத்தியில் அரசின் மீதான வெறுப்பினை உருவாக்குகின்றன என்பதனை அரசு சிறிதும் உணராமலேயே செயற்பட்டுக் கொண்டிருந்தது.

இந்த நிலையிலேயே சந்திரிகா பண்டாரநாயக்க மற்றும் ரணில் விக்கிரமசிங்க இருவரும் இணைந்து துல்லியமான காய்நகர்த்தல்களுக்குத் திட்டமிட்டுக் கொண்டிருந்தனர். சிங்கள மக்களின் வாக்குகளை கணிசமாக பிரித்தாலன்றி வெற்றி வாய்ப்பு கைக்கெட்டாது என்பது நன்றாகத் தெரிந்த நிலையில் சிறிலங்கா சுதந்திரக்கட்சியினை சேர்ந்த ஒரு முக்கிய தலைவரைக் களமிறக்குவதே வெற்றிக் கனியினை தட்டிப் பறிப்பதற்கு சரியான வழியெனக் கண்டறிந்து அதில் வெற்றியும் கட்டு விட்டனர். ஆனால் மைத்திரிபால சிறிசேன அவர்கள் வெற்றி பெறுவதற்கு சிங்கள மக்களின் வாக்குகள் மட்டுமன்றி தமிழ் மற்றும் முஸ்லிம் மக்களின் வாக்குகளும் அவசியமானவை எனும் நிலை நன்றாக உணரப்பட்டுக் கொண்டிருக்கையில் தமிழ் மக்களின் முடிவு என்னவாக இருக்கப் போகின்றது என்பதே இன்று மிகப் பெரும் கேள்வியாக உருவாகிக் கொண்டிருக்கின்றது. உண்மையில் தமிழ் மக்கள் எவ்வாறான முடிவினை எடுக்க வேண்டும்? இது தொடர்பாக மூன்று வகையான கருத்து நிலைகள் ஊடகங்களில் நிலவுவதனைக் காண முடிகின்றது. ஒன்று தமிழ் மக்கள் பொது வேட்பாளரான மைத்திரிபால சிறிசேன அவர்களை ஆதரிக்க வேண்டும். இரண்டாவது தமிழ் மக்கள் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச அவர்கள் வெற்றி பெறுவதனை ஏதோ ஒருவகையில் உறுதிப்படுத்த வேண்டும். மூன்றாவது, தமிழ் மக்கள் இத் தேர்தலினை முற்றாகப் புறக்கணிக்க வேண்டும்.

அரசியல் சாணக்கியத்துடன் சிந்திக்கும் எவரும் முதலாவது வாதத்தினை தேர்ந்தெடுப்பார் என்பதற்கு பல காரணங்களை முன் வைக்க முடியும். ஏனெனில் யுத்தம் முடிந்து ஐந்து வருடங்கள் முடிந்து விட்ட போதும் தமிழ் மக்களின் வாழ்வில் இன்னும் துயரம் முடிந்தபாடில்லை.

கல்வி, பொருளா தாரம், வீட்டு வசதி, அரச தொழில் வாய்ப்புக்கள், வாழ்வாதாரம் என தமிழ் மக்கள் தொடர்ச்சியான இன்னல்களை அனுபவவித்துக் கொண்டிருக்கின்றார்கள். இடம் பெயர்ந்து வாழும் மக்களின் துயரமும் விதவைகளின் துயரமும் தொடர்கின்றன. இதற்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்க வேண்டுமெனில் நாட்டில் நல்லாட்சி ஏற்பட வேண்டும். இனப்பிரச்சினைக்கு அர்த்தபுஸ்டியான தீர்வு வழங்கப்பட வேண்டும். இவற்றினை யுத்தத்தினை வெற்றி கொண்ட அரசாங்கத்தினால் இவ்வளவு காலமும் செய்ய முடியவில்லை. இனி மேலும் செய்யும் என்றும் எதிர்பார்க்க முடியாது. ஆகவே தமிழ் மக்களுடன் சுமூகமான உறவினைப் பேணக் கூடிய புதிய அரசாங்கத்திற்கு வாங்களித்து நாங்களும் இந்நாட்டின் பங்குதாரர்கள் என தமிழ் மக்கள் உரக்கச் சொல்ல வேண்டியது காலத்தின் கட்டாயமாகும்.

ஏனெனில் சிறிலங்கா சுதந்திரக் கட்சியின் புதிய செயலாளர் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் ஆதரவு தங்களுக்குத் தேவையில்லை எனக் கூறுகின்றார். மில்லியன் கணக்கான வாக்குகளைக் கொண்டுள்ள தமிழினம் அவரது கட்சிக்கு வெறுமனே வாக்களிப்பதற்கு வீதியில் காத்துக் கிடக்கிவில்லை என்பதனை உரத்துச் சொல்ல வேண்டும்.

மகிந்த ராஜபக்ச வெல்வதனை மறைமுகமாக உறுதி செய்ய வேண்டும் என்னும் இரண்டாவது வாதம் பல ஆபத்துக்களை தன்னகத்தே கொண்டுள்ளதுடன் நடைமுறைச் சாத்தியமற்ற கற்பனையாகவும் உள்ளது.

ஏனெனில் இவ்வாதம் மகிந்த ராஜபக்ச மீண்டும் வெற்றி பெறும் போது தொடர்ந்தும் சீனாவுக்கு அதிக முக்கியத்துவம் வழங்குவார் என்றும் இது மேற்குலகம் மற்றும் இந்தியாவுக்கு கோபத்தினை ஏற்படுத்தும் எனவும் இது தமிழ் மக்களுக்கு நீண்ட காலத்தில் நன்மையைப் பெற்றுத் தரும் என்றும் எதிர்வு கூறுகின்றது.

இது விடுதலைப்புலிகள் 2004 ஆம் ஆண்டு கடைப்பிடித்த அணுகுமுறைக்கு ஒப்பானதாகும். ஒரு கடும்போக்குவாதியினை பதவிக்கு கொண்டு வருவதன் மூலம் தமது போராட்டத்தினை நியாயப்படுத்தி அடுத்த கட்டத்திற்கு நகரலாம் என அவர்கள் எதிர்பார்த்தனர். தாம் முழுமையாக யுத்தத்தில் தோற்கடிக்கப்படுவோம் என்றோ அல்லது தாயகத்தில் தமிழர் அரசியல் அரங்கிலிருந்து ஒட்டுமொத்தமாக அகற்றப்படுவோம் என்றோ அவர்கள் எதிர்பார்த்திருக்க வாய்ப்பில்லை. அத்துடன் அவர்கள் எதிர்பார்த்தது நடக்கவுமில்லை. தமிழ் மக்களுக்கும் அந்த நிலை மீண்டுமொருமுறை ஏற்படாது என்பதற்கு என்ன உத்தரவாதம்?

தமிழ் மக்கள் இத்தேர்தலினை முற்றாகப் புறக்கணிக்க வேண்டும் என்னும் மூன்றாவது வாதம், வெற்றி பெறும் வேட்பாளர், தான் தமிழ் மக்களுக்கு எவ்விதத்திலும் கடமைப்பட்டபட்டவர் அல்ல என நினைப்பதற்கும் ஜனநாயக விழுமியங்களை மதிக்கும் மேற்குலகு நாடுகள் மத்தியில் தமிழ் மக்கள் மீது மீண்டும் அதிருப்தி ஏற்படுவதற்கும் வழிவகுக்கக் கூடும். ஆகவே ஓடு மீன் ஓடி உறு மீன் வருமளவும் வாடியிருந்த கொக்குக்கு வயிற்றில் வந்த தாம் அல்சர் என்னும் புதுக்கவிதை வரிகள் தமிழ் மக்களுக்கு பொருந்தக்கூடாது என்பதில் நாம் அனைவரும் கவனமாக இருக்க வேண்டும்.

நாங்கள் வீடுகளுக்கு செல்வதனை தடுத்தவர்களை வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என இடம் பெயர்ந்து வாழும் ஒரு தமிழ் மகன் கூறியது ஞாபகத்திற்கு வருகின்றது. உண்மையில் யார் வெற்றி பெற வேண்டும் என்பதனை விட யார் தோற்கடிக்கப்பட வேண்டும் என்பதில் தமிழ் மக்கள் உறுதியாக இருப்பது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நீண்டகால அமைதியின் மூலம் நன்கு தெரிகின்றது.

LEARN TO TRADE FOREX

FOREX FOR YOU INVITES YOU TO TAKE PART IN THE FOREX LIVE TRADING ALONG WITH THE EXPERIENCED TRADER. TRADER PROVIDES BUY AND SELL SIGNAL ON DAILY BASIS TO GET PROFITABLE TRADING.

THIS IS NOT A STOCK MARKET
EASY TO LEARN AND BECOME AN EXPERT

**TO JOIN THE NEW BATCH AND FREE SEMINAR**
PLEASE CALL **NANDAN @ 416-409-1395**

அனுபவம் வாய்ந்த வல்லுனரின் நேரடி வழிகாட்டி மூலம்
FOREX TRADING ல்
பங்குபெற உங்களை அழைக்கின்றோம்.
**இது ஒரு பங்குச் சந்தை அல்ல**
அன்றாடம் வழிகாட்டியுடன்
வாங்கி விற்பதன் மூலம் அதிகலாபம் பெறமுடியும்.
புதிய பிரிவில் சேர அழையுங்கள்
நந்தன் : 416-409-1395
5200 Finch Ave E, Suite208
Scarborouh,ON, M1S 4Z4

# யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக்குழுக் கூட்டத்தில் அத்தியடிக் குத்தியனும் அடியாட்களும் அட்டகாசம்!

(6ம் பக்கத் தொடர்ச்சி) காயப்படுத்தினார் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தாவின் பிரத்தியேக செயலாளரும் அவரது தம்பியாருமான தயானந்தா அமைச்சர் ஐங்கரநேசன் மீது தண்ணீர்ப் போத்தலால் எறிந்து தாக்குதல் நடத்தப்பட்டது. இதன் போது விவசாய அமைச்சர் ஐங்கரநேசன் மீது இரண்டு தண்ணீர்ப் போத்தல்கள் வீசப்பட்டன. இதனால் அவர் காயமடைந்து வாயில் இருந்து இரத்தம் வழிந்தது. இந்நிலையில் அமைச்சர் டக்ளஸின் பாதுகாப்பு பொலிஸார் அவரை பாதுகாத்து நிற்க முதலமைச்சரின் பாதுகாப்பு பிரிவினர் முதலமைச்சரை பாதுகாப்பாக வெளியேற்றி விட்டனர். பின்னர் இதனையடுத்து கூட்டமைப்பு சபையிலிருந்து வெளியேறியதையடுத்து ஊடகவியலாளர்களும் அரசாங்க உத்தியோகஸ்த்தர்கள் பலரும் சபையிலிருந்து வெளியேறினர்.


யாழ்.வைத்தியசாலைக்குச் சென்ற டக்ளஸ் ஐங்கரநேசனிடம் என் அடியாட்களின் அடி எப்படி? எனக் கேட்கிறாரோ?

**முதலமைச்சரின் குற்றச்சாட்டு**

யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக் குழுவின் கூட்டத்தில் ஏற்பட்ட குழப்பங்களுக்கு சிறிலங்காவின் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தாவும் அவர் வெளியிலிருந்து கூட்டத்திற்குக் அழைத்து வந்த வெளியாட்களுமே காரணம் என வடமாகாண முதலமைச்சர் சவிக்னேஸ்வரன் குற்றம் சுமத்தியுள்ளார். யாழ். மாவட்டச் செயலகத்தில் இடம் பெற்ற யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்பு குழுவின் கூட்டச் சம்பவத்தை அடுத்து வடமாகாண முதலமைச்சர் அலுவலகத்தில் இடம்பெற்ற அவசர கலந்துரையாடலை அடுத்து முதலமைச்சர் விக்னேஸ்வரன் ஊடகங்களுக்கு கருத்து வெளியிட்ட போதே இவ்வாறு குற்றம் சுமத்தியுள்ளார்.


யாழ்.வைத்தியசாலைக்குச் சென்று அடித்த கை வலிக்கிறதா என தனது குண்டர்களிடம் விசாரிக்கும் டக்ளஸ்

இது தொடர்பில் அவர் குறிப்பிடுகையில் 'யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக் குழுவின் கூட்டம் துரதிர்ஷ்டவசமாக திடீரென முடிவுக்கு வந்தது. இதற்கான முழுப்பொறுப்பும் சிறிலங்காவின் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தாவையும் அவர் வெளியிலிருந்து கூட்டத்திற்குக் அழைத்து வந்த வெளியாட்களையுமே சேரும்.

அரசியல் சம்பந்தமாகவோ அரசியல் கட்சிகள் பற்றியோ அல்லது வேட்பாளர்கள் பற்றியோ இந்த ஒருங்கிணைப்புக் குழுவின் கூட்டங்களில் உரை எதுவும் நிகழ்த்தக் கூடாது என்று இன்றைய கூட்டத்தில் அரசாங்க அதிபர் வேண்டுகோள் விடுத்திருந்தார். இந்நிலையில் யாழ்.மாவட்ட ஒருங்கிணைப்புக் குழுவின் இணைத்தலைவரான அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா தனது உரையில் அரசியல் ரீதியாகப் பேசி வடமாகாண சபையையும் கூட்டமைப்பின் உறுப்பினர்களையும் மற்றும் வடமாகாண சபையின் தேர்தல் அறிக்கையையும் கடுமையாக விமர்சித்தார். அதற்கு எதிர்ப்புத் தெரிவித்த தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு மாகாண சபை உறுப்பினர்களையும் நாடாளுமன்ற உறுப்பினர்களையும் சர்வாதிகாரமாக அடக்குவதற்கு சிறிலங்காவின் அமைச்சர் டக்ளஸ் முயன்ற போது அங்கு குழப்பம் ஆரம்பமாகியது. இதன் போது ஒருங்கிணைப்புக் குழுவின் கூட்டத்தில் கலந்து கொள்ளத் தகுதியில்லாத மர்ம நபர்கள் சிலரும் குறுக்கிட்டுக் கொண்டதையடுத்து அங்கு மேலும் குழப்பம் அதிகரித்தது.

சிறிலங்கா அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா சார்பில் கலந்து கொண்டவர்கள் கையில் கிடைத்த பொருட்களால் தாக்குதல் நடத்தியதையடுத்து இந்தக் கூட்டத்தில் பதற்றம் ஏற்பட்டு மக்கள் பிரதிநிதிகள் கூட்டத்தை விட்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. (40ம் பக்கம் பார்க்க)

Jobs Jobs Jobs !!!!
Are you looking for work?
JOBS AVAILABLE IN Vaughan, Woodbridge & Mississauga
Apply Today Work Tomorrow
✦ GENERAL LABOUR ✦ ASSEMBLY ✦ PACKAGAGING
✦ FORKLIFT OPERATORS ✦ SHIPPING RECEIVING
Male & Female Workers needed All Shifts available
Must have safety boots
No experience needed we will train you
Contact: 647 456 6625
Please apply in Person at

| Mississauga Office | Vaughan Office | Scarborough Office |
|---|---|---|
| (Monday - Friday 9am-3pm) | (Monday - Friday 9am-3pm) | Monday-Friday 9am - 3pm) |
| 7111 Syntex drive | 160 Applewood Crescent | 80 Cooperate Drive |
| Suite 318 | Unit # 22 ( Second Floor) | Unit 309 |
| Mississauga, Ont | Vaughan, Ont | Scarborough, Ont |
| L5N8C3 | L4K4H2 | M1H 3G5 |



# CANADA OLD STUDENTS' ASSOCIATION OF PUNGUDUTIVU



அமரர் திரு வே. க. சோமசுந்தரம்
- முன்னாள் யாழ் மாவட்ட அபிவிருத்திச்சபை உறுப்பினர் -
அவர்களின் ஞாபகார்த்த கலைஅரங்கில்



பிரதம விருந்தினர் K.V. தவராசா
அவர்கள் கலந்து சிறப்பிக்கும்

19 ஆம் ஆண்டில்

## கனடா - புங்குடுதீவு பழைய மாணவர் சங்கம்

பெருமையுடன் வழங்கும்

# பூவரசம் பொழுது 2014

உங்கள் பூவரசம் பொழுது !!!

பிரவேசம் $10




CALL : 647 560 0401
Web : www.pungudutivuworld.com
Email : info@pungudutivuworld.com

**Chinese Cultural Centre - Scarborough**
5183 SHEPPARD AVE E, TORONTO, ON. M1B 5Z5

Guna Selliah
416.371.7776

Kiri Thevathas
Independently Owned & Operated
Cell: 416-902-8313
Bus: 905-201-9977
Fax: 905-201-9229

747 AUTOPARTS

113 Mc Master Ave Ajax, ON. L1S 2E6
Office: (905) 686 5511

APOLLO rent-a-car
416 613 4919
905 599 0211

NOW ON SMS DIRECTORY
647-556-5252

AKKIRA TOURZ Ltd.
1961 KENNEDY RD.SUIT #4
TORONTO, ONTARIO
M1P 5A2

Catering

THEVAN
Office: 905 477 3331
Tel: 905 477 3350
Fax: 905 477 2140

Home

Pageerathan Ariyaputhiran
Dir: 416.529.9000
RE/MAX
Office: 416.287.2222 Fax: 416.282.4488

Vilosan Sivatharman B.Eng
HEAVEN CARES
Funeral Director
416 993 0826 / 416 431 3600 Ext:1

# விடுதலைப் போராட்டங்கள் என்றுமே வீழ்ச்சி அடைந்ததில்லை! இனப்படுகொலை ஆவண நூலாசிரியர் இராமு.மணிவண்ணன்

“Sri Lanka Hiding the Elephant” இனப்படுகொலை ஆவண நூலாசிரியர், பேராசிரியர் இராமு மணிவண்ணன் முழக்கம்

“ஜேர்மன் சிறைச்சாலைகளில் யூத இன மக்கள் சந்தித்த துயரங்களை தான் எமது மக்களும் சந்தித்துள்ளார்கள். ஆனால் எமக்காக எந்தவொரு நாடும் குரல் கொடுக்கவில்லை. ஐ.நா.கூட அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. இலங்கைத் தமிழர்கள் மீது 2009ம் ஆண்டு மே மாதம் மேற்கொள்ளப்பட்ட இனப் படுகொலையைப் பார்த்து தாங்க





முடியாத துயரங்களுடன் முதன் முதலாக அழுதேன். அதே போன்று இந் நூலை எழுதும் போதும் வழிந்த கண்ணீரை மறைத்துக் கொண்டு தான் எழுதினேன். றஷ்யப் புரட்சி வாதியும் வரலாற்று பேராசிரியருமான கால் மாக்ஸின் வழியில் உலகளாவிய ரீதியில் நீதிக்கான தேடுதலை ஏற்படுத்த வேண்டும் என்ற . ஆக்ரோசத்துடன் தான் “Sri Lanka Hiding the Elephant” என்ற இந்நூலை எழுத ஆரம்பித்தேன். மனித இனத்தின் சுதந்திரத்துக்காக நாம் போராட வேண்டும். ஆயிரம் கைகள் மறைந்தாலும் ஆதவன் என்றும் மறைவதில்லை. அதே போன்று விடுதலைப் போராட்டங்கள் என்றுமே வீழ்ச்சி அடைந்ததில்லை. எங்களை ஒரு சக்தி -- இறை சக்தி வழி நடத்தி செல்கிறது. மனித இனத்தின் சுதந்திரத்துக்காக நாம் போராட வேண்டும்”.

கடந்த சனிக்கிழமை மாலை மார்க்கம் மிலிக்கன் மில்ஸ் சனசமூக நிலைய மண்டபத்தில் நடைபெற்ற நூல் வெளி மீட்டு விழாவில் உரையாற்றிய சென்னை பல்கலைக் கழகத்தின் அரசியல், பொது நிர்வாகத்துறை தலைவரான பேராசிரியர் ராமு மணிவண்ணன் இவ்வாறு உணர்ச்சி வசத்துடன் முழங்கினார். நாடு கடந்த தமிழீழ அரசு தமிழ் படைப்பாளிகள் கழகம் ஆகியன கூட்டாக ஏற்பாடு செய்திருந்த இந்நூல் வெளியீட்டு விழாவிற்கு படைப்பாளிகள் கழகத் தலைவர் திரு.தங்கவேலு அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

பேராசிரியர் ராமு மணிவண்ணன் அவர்கள் தொடர்ந்து உரையாற்றி போது பின்வருமாறு குறிப்பிட்டார்: “மனித இனத்தின் சுதந்திரத்துக்காக நாம் போராட வேண்டும். இந்தியாவுக்கு எதிராக அல்ல. இந்தியாவின் ஆதரவு இல்லாமல் இலங்கையில் இனப்படுகொலை நடந்திருக்காது. ஐ.நா.வுக்கு இணைப்பு பாலமாக இருந்து நான் தகவல்களை திரட்டி வழங்கினேன். அதனால் என்னைக் கைது செய்ய படை வீரர்கள் வந்தனர். நான் திரட்டி வைத்திருந்த ஆதாரங்களை பின்கதவால் அனுப்பி விட்டு அவர்களை சந்தித்தேன். இலங்கை தமிழர்கள் மீது மேற்கொள்ளப்பட்ட இனப் படுகொலை பற்றிய விபரங்கள் இரண்டு ஆண்டு காலத்தின் பின் சாட்சிகளின் மூலம் வெளிக் கொணரப்பட்ட பின்னரே ஐ.நா. அதனை உணர்ந்தது. பந்நாட்டு மனித உரிமைக் குழுவினர் முன் நாம் எமது பிரச்சினையை முன் வைத்துப் போராட வேண்டும். 2009ம் ஆண்டிற்குப் பின்னர் ஈழத் தமிழர்களுக்கு தனியான அரசு அவசியம் என்பதனை தமிழகப் பொது மக்கள் உணர்ந்து கொண்டுள்ளார்கள். அந்த தமிழீழ அரசினை அமைப்பதற்கு தமிழ் மக்களும் அரசியல்வாதிகளும் இணைந்து செயற்பட வேண்டும்.

இலங்கை பாராளுமன்றத்தில் 2009ம் ஆண்டு ஜூன் முதலாம் திகதி உரையாற்றிய ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ “நாம் தமிழர் பிரச்சினைக்கு தீர்வு கொண்டு வந்து விட்டோம். நாம் அதற்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டோம். புலம் பெயர்ந்த தமிழர்களுக்கு இருபது வருடங்கள் பிரச்சினை பற்றிய நினைவிருக்கும். அதன் பின்னர் அவர்கள் மறந்து விடுவார்கள்” எனக் கூறினார். நாம் இருபது ஆண்டுகளல்ல நூறு ஆண்டு கால அரசியல் பார்வையுடன் செயற்பட வேண்டும். நாம் தான் அரசியல் மாற்றத்தினை கொண்டு வர வேண்டும். வட அமெரிக்கா, ஐரோப்பியா போன்ற நாடுகளில் புலம் பெயர்ந்து வாழும் நமது இளந் தலைமுறையினர் சட்டக் கல்வியை மேற்கொண்டு எமது பிரச்சினைகளை உலக நாடுகளுக்கு வெளிப்படுத்தும் வகையயில் செயற்பட்டு தமிழினம் ஒடுக்கப்பட்டு வன்முறைகளுக்கு உள்ளாக்கப்பட்ட இனம் என்பதனை நிரூபித்து வருவது வரவேற்கத் தக்க தாகும்.

அத்துடன் புலம் பெயர் சமூகத்தினர் ஸ்ரீலங்கா அரசுக்கு சமூக, பொருளாதார தடைகளை ஏற்படுத்த வேண்டும். (44ம் பக்கம் பார்க்க)







Yorkdale Toyota

3080 Dufferin Street
Toronto, ON M6A 2S6

Dufferin & Lawrence

2015 Corolla LE AUTO $0 down @ 2.99% $149.75/bw FINANCE FOR 84 MONTHS including tax

FINANCE

2015 RAV-4 BASE $0 down @ 3.99% $186.76/bw FINANCE FOR 84 MONTHS including tax

2015 Corolla LE AUTO $0 down @ 2.49% $139.00

LEASE

2015 RAV-4 BASE $0 down @ 2.99% $167.50



Tony Siva
647-269-0749
tonymidtown@hotmail.com



FOR TONY SIVA'S CLIENTS!!!



40" LED TV

OR

Limited time Offer with the purchase of USED & NEW vehicles Finance or Lease only
Cannot be combined w/any other offer



SAMSUNG Galaxy 4 Tablet



Seasons Greetings & Happy New Year to All my Clients & Friends

$0 DOWN on New or Used Vehicles

NO CREDIT BAD CREDIT NO PROBLEM!

Used vehicles - HONDA, ACURA, LEXUS, AUDI, BMW, MERCEDES BENZ

# மைத்திரிபாலவின் எழுச்சி அலை!

(22ம் பக்கத் தொடர்ச்சி) ஒரு பழமைவாத சமூகத்தில் உளவியல் மாற்றத்தை மிகவும் குறுகிய காலத்தில் மற்றும் ஒரே அடியில் கொண்டு வருவதற்கு எதிர்பார்ப்பது ஜீரணிக்க முடியாத ஒன்று. அத்துரலிய ரத்தன்ன மற்றும் சம்பிக்க ரணவக்கவின் ஆலோசனையான ஜனாதிபதியின் அதிகாரத்தை குறைக்கும் விடயம் அதிகம் விரும்பத்தக்க ஒன்று.

இந்த நிலமை போதாது என்றால் ரணிலை பிரதமராக்குவதாக மைத்திரிபால வழங்கியுள்ள வாக்குறுதி வேறு இருக்கிறது. நூறு நாட்களுக்குப் பின்னர் மைத்திரிபால சிறிசேன ஜனாதிபதியாக இல்லாமல் போவதுடன் அதேவேளை ரணில் பிரதமராக வருவதற்காகவும் யாராவது ஒருவர் ஏன் மைத்திரிபால சிறிசேனவுக்கு வாக்களிக்க வேண்டும்? மேலும் நிறைவேற்று ஜனாதிபதி முறை ஒழிக்கப் பட்டதின் பின்னர் அதிகார மையத்தில் பிரதமரே வீற்றிருக்கப் போகிறார்.

ஒரு நாள் மக்கள் விழித்தெழும் வேளையில் தங்களை அறியாமலே தாங்கள் தலைவராக ரணிலை தெரிவு செய்திருப்பதை காண நேரும்? இல்லாவிட்டால் மைத்திரிபால நிறைவேற்று ஜனாதிபதியாக இருக்க நேர்ந்தால் ரணிலுக்கு என்ன நடக்கும்?

மைத்திரிபால சிறிசேன ஜனாதிபதிக்காக போட்டியிட்டால் அவருக்கு வாக்களிப்பதற்கு ஏராளமான தூய மற்றும் எளிய காரணங்கள் உள்ளன. அவர் நாட்டை நல்ல வழிக்கு கொண்டு செல்வார், ஏனென்றால் மகிந்த ராஜபக்ஸ தனது குடும்ப சொந்தங்களையும் மற்றும் அவர்களது குண்டர்களையும் மற்றும் அயோக்கியத்தனமான அமைச்சரவை சகாக்களையும் பாதுகாக்கும் ஏவற் பையனாக இருக்க தன்னை அனுமதித்திருக்கிறார்.

ஆனால் ரணில் மற்றும் சந்திரிகா மீண்டும் அதிகாரத்தில் அமர்வதற்காக மட்டும் யாராவது ஏன் மைத்திரிபால சிறிசேனவுக்கு வாக்களிக்க வேண்டும்? 2005ல் அவர்கள் மகிந்தவை தோற்கடிக்க முயற்சித்தார்கள் ஆனால் வெற்றி பெறவில்லை. நாங்கள் முன்னுக்குச் செல்ல வேண்டுமா அல்லது பின்னுக்குச் செல்ல வேண்டுமா? வாக்காளர்கள் ஒரு ஆபத்தை உணர்ந்தால் அது நேர இயந்திரத்தை பின்னோக்கி நகர்த்தி விடும். அதற்கு மைத்திரிபால சிறிசேனவை பயன்படுத்தி ரணில் மற்றும் சந்திரிகா ஆகியோர் ஆதிக்கத்தை பெற்றபின் அவரைக் களைந்து விடுவார்கள், அவர்களுக்கு அவர் ஒரு முன்னிலை மனிதரே தவிர அவர்களது சொந்த மனிதர் அல்ல, இதை விளங்கிக் கொள்ளும் வாக்காளர்கள் அவரை விட்டு விலகுவதுடன் சரியான தேர்வாக மகிந்தவுடன் இருப்பார்கள்.

தெளிவான வரைபடம் ஒன்று இல்லாமல் குழப்பம் மற்றும் அரசியல் வெற்றிடம் என்கிற தெரிவை மேற்கொள்ளும்படி வாக்காளர்கள் கேட்கப்பட்டுள்ளார்கள். இப்போது பொது எதிரணி மேற்கொள்ளும் பிரசங்கம் வெறும் வெத்து வேட்டு மட்டுமே.

மகிந்த ராஜபக்ஸ மற்றும் மைத்திரிபால சிறிசேன ஆகிய இருவருக்குமே அந்தந்த அணிகளில் முகமூடிகள் அல்லது மனிதக் கேடயங்கள் உள்ளன. மகிந்தவுக்கு பேராசை மிக்க அவரது குடும்ப மையத்தைக் கொண்ட தன்னலக் குழுவும் சிறிசேனவுக்கு சந்திரிகா ரணில் மற்றும் பழைய காவலர்களும் உள்ளனர்.

இந்த இரண்டு சேர்க்கைகளில் கூட்டு சிங்கள வாக்காளரின் மனப்போக்கு நிச்சயமாக மைத்திரிபால ரணில் மற்றும் சந்திரிகா பண்டார நாயக்காவை விட மகிந்த மற்றும் கோத்தபாயா சேர்க்கையையே தெரிவு செய்வதாக இருக்கும் இதை திருத்துவதற்கு ஒரே வழி மட்டுமே உள்ளது மற்றும் அதன் மூலம் மைத்திரிபாலவின் பிரச்சாரம் மற்றும் அவர் திறந்து வைத்துள்ள வெற்றிடம் என்பனவற்றைக் காப்பாற்ற முடியும்.

ஜனநாயக எதிரணி ஊமையாக இருப்பதால் பேரரசு திருப்பியடிக்கும் நிலையை முடிவுக்கு கொண்டு வந்த அராபிய வசந்தத்தை போல இந்தத் தருணத்தை பாதுகாக்க ஒரே வழி மட்டுமே உள்ளது.

அது அனுரகுமார திசாநாயக்கா சம்பிக்க ரணவக்க மற்றும் சஜித் பிரேமதாஸ போன்ற கூர்மையான இளம் பிரமுகர்கள் மற்றும் காட்டமான பேச்சாளர்களை மேடைக்கு கொண்டு வருவது தான் அவர்கள் யாரும் நேற்றைய மனிதர்கள் கிடையாது, கொள்கை நடவடிக்கைகளின் மையம், பிரச்சாரங்களை திட்டமிடுதல் மற்றும் தலைமை மேஜை என்பனவற்றை தயாரிப்பதில் மைத்திரிபாலவின் அருகிலிருந்து செயலாற்ற பொருத்தமானவர்கள்.

திரு.சிறிசேன திறமைமிக்க ஒழுக்கமான மனிதர், சாத்தியமான எங்கள் கடைசி நம்பிக்கை. மகிந்த ராஜபக்ஸ தனது கடைசித் துரும்பாகப் பயன்படுத்த நினைக்கும் கடந்தகால தோல்விகளை நினைவுபடுத்தும் மற்றும் பிரதிநிதித்துவப்படுத்தும் சிறிசேனவின் தற்போதைய கூட்டாளிகள் மற்றும் பாது காவலர்களால் மூழ்கடிக்கப்படமல் மற்றும் பாதிக்கப்படாமல் நாட்டைக் காப்பாற்ற சிறிசேன தகுதியானவர்.

## ஆட்சி மாற்றத்தை ஆதரிக்கிறதா அமெரிக்கா?

(16ம் பக்கத் தொடர்ச்சி) விடுதலைப் புலிகளை அழித்துப் போரை முடிவுக்கு கொண்டு வர மேற்குலக நாடுகள் உதவி செய்தமைக்கு ஒரே காரணம் இலங்கையில் அமைதி ஏற்பட வேண்டுமென்பதே.

இந்தியப் பெருங் கடலின் மிக முக்கியமான இட்மாக விளங்கும் இலங்கைத் தீவில் அமைதி நிலவுவதையே எல்லா நாடுகளும் விரும்புகின்றன. ஏனென்றால் அதுவே அந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவியாக இருக்கும். இப்போது இலங்கை அனுபவிக்கும் அமைதியை தமது பொருளாதார நலன்களை அடைவதற்காக பயன் படுத்திக் கொண்டிருக்கும் மேற்குலக நாடுகள் நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்தி எதையும் சாதிக்க முடியாது என்பதை உணராமல் இருக்க முடியாது. அத்தகைய குழப்பம் நிலவ வேண்டுமென்று மேற்குலகம் தீர்மானித்திருந்தால் நிச்சயமாக புலிகளுக்கு எதிரான போருக்கு உதவியிருக்க மாட்டாது. புலிகளை அழித்து போரில் வெற்றி பெற உதவிய மேற்குலகம் மீண்டும் புலிகளுக்கு உயிர் கொடுக்க முனைகிறது, நாட்டைப் பிரிக்க முனைகிறது என்றால் அதனை அறிவுபூர்வமாக சிந்திக்கும் எவரும் நம்ப மாட்டார்கள்.

இதனை எதிரணியின் பொது வேட்பாளர் மைத்திரிபால சிறிசேனவும் கூறியிருக்கிறார். ஆனால் அரசாங்கமோ சாதாரண சிங்கள மக்களை இது போன்ற உணர்ச்சிபூர்வமான பிரசாரங்களின் மூலம் தன் பக்கம் திருப்ப முனைகிறது.

இது எந்தளவுக்கு வெற்றி பெறும் என்பதை வரும் ஜனவரி 8ம் திகதி நடக்கப் போகும் தேர்தலில் தான் விடை கிடைக்கும்.


ஓம் சரவணபவ

# றொறன்ரோ திருச்செந்தூர் முருகன் திருக்கோயில்

**2400 FINCH AVE., WEST, (Westren & Finch) TEL: 416-744-9568**



## 06 டிசம்பர் 2014 முதல் 26 டிசம்பர் 2014 வரை

## பிள்ளையார் பெருங்கதை

06 டிசம்பர் 2014 முதல் பிள்ளையார் பெருங்கதை தினமும் மாலை 6.00 மணிக்கு நடைபெறுகின்றது.

**26.12.2014 வெள்ளிக்கிழமை:-**

விநாயகசஷ்டி விரதம் காலை 10.00 மணிக்கு 108 சங்காபிஷேகம் நடைபெற்று பூசை வழிபாடுகளுடன் விநாயகப் பெருமான் உள்வீதி வலம் வந்தருள திருவருள் கூடியுள்ளது. முடிவுல் அன்னதானம் நடைபெறும்.

**26.12.2014 – 04.01.2015**

திருவெம்பாவை விரதம் தினமும் காலை 9.00 மணிக்கு நடைபெறும்.

**21.12.2014 ஞாயிற்றுக்கிழமை**

ஹனுமான் ஜெயந்தி மாலை அபிஷேகம், பூசைகள் சிறப்பாக நடைபெறும்.

தினமும் மாலை ஐயப்ப பூசை வழிபாடுகள் நடைபெறும்.

உபயம் செய்ய விரும்பும் அடியார்கள் ஆலயத்துடன் தொடர்பு கொள்ளவும்.

"கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய"

முருகன் பணியில்
நிர்வாக சபையினர்

# கிட்னி பாதிப்பிற்கு டயாலிசிஸ் தீர்வல்ல! மாற்று கிட்னி பொருத்துவதே சிறந்தது



வாந்தி அசதி கை கால் வலி சாப்பிட முடியாதது, எடைகுறைவு ஆகியவை ஏற்பட்டால் அசட்டையாக இருக்கக் கூடாது. அதற்கு காரணம் என்னவென்று பரிசோதித்து பார்த்தால் கிட்னி செயல்பாடு 80 சதவீதம் பாதித்துள்ளதும் 20 சதவீதம் மட்டுமே செயல்பாட்டில் உள்ளதும் தெரியவரும். 20 சதவீத பயன்பாட்டில் உள்ள கிட்னி ஒரு ஆண்டு முதல் 2 ஆண்டு வரை அதே செயல்பாட்டில் இருக்கும். அதற்குள் மாற்று கிட்னி பொருத்துவதற்கான 3 மாத பரிசோதனைகளை முடித்து விடலாம்.

இதற்கிடையே மாற்று கிட்னிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இந்நிலையில் கிட்னி 15 சதவீத செயல்பாட்டு அளவிற்கு வந்து விடும். கிட்னி 15 சதவீத செயல்பாட்டிலிருந்து 10 சதவீத செயல்பாட்டை அடைவதற்குள் மாற்று கிட்னி பொருத்தி விட வேண்டும். மாற்று கிட்னி பொருத்துவதே கிட்னி பாதிப்பிற்கான ஒரே தீர்வான சிகிச்சை. மாற்று கிட்னி பொருத்தாமல் டயாலிசிஸ் செய்வது தற்காலிக நிவாரணம். ஒவ்வொருவருக்கும் 2 கிட்னி உள்ளது. சிலருக்கு இரண்டும் படிப்படியாக செயலிழந்து வரும்.

இவ்வாறு பாதிக்கப்படும் கிட்னிகளை உடனடியாக அகற்றி விட்டு மாற்று கிட்னி பொருத்தாமல் டயாலிசிஸ் செய்ய முடிவெடுத்தால் அதை வாரத்திற்கு 3 முறை மட்டுமே செய்யலாம். அதற்கு மேல் செய்ய கூடாது. ஒரு முறை டயாலிசிஸ் செய்தால் 4 மணி நேரம் மட்டுமே ரத்தத்தை சுத்திகரிக்க முடியும். இவ்வாறு வாரத்திற்கு 12 மணி நேரம் மட்டுமே ரத்தத்தை சுத்திகரிப்பு செய்வது உடல் நலத்திற்கு போதுமானதல்ல. இவ்வாறு டயாலிசிஸ் மேற்கொள்ள நாளை ஒதுக்குவதால் வேலைக்கு செல்ல முடியாது. இயல்பு வாழ்க்கை பாதிக்கும். மேலும் தொடர்ந்து டயாலிசிஸ் செய்வது மாரடைப்பு உள்ளிட்ட பல்வேறு பாதிப்புகளை ஏற்படுத்தும். இத்தகைய பிரச்னைகளை சந்திக்காமல் நேரடியாக மாற்று கிட்னி பொருத்துவது முக்கியமானது. அவசரமானது. கிட்னி 20 சதவீத செயல்பாடு நிலையை அடைந்தவுடன் மாற்று கிட்னி பொருத்துவதற்கான பரிசோதனைகளை மேற்கொள்ள வேண்டும்.

தற்போதைய நவீன சிகிச்சை மூலம் மாற்று ரத்தவகை உள்ளவர்களின் கிட்னியையும் உடல் ஏற்றுக்கொள்ள புதிய நவீன சிகிச்சை முறைகள் வந்துள்ளது என்கின்றனர் சிறுநீரக சிகிச்சை மருத்துவர்கள். 20 சதவீத பயன்பாட்டில் உள்ள கிட்னி ஒரு ஆண்டு முதல் 2 ஆண்டு வரை அதே செயல்பாட்டில் இருக்கும். அதற்குள் மாற்று கிட்னி பொருத்துவதற்கான பரிசோதனைகளை முடிக்கலாம்

## பகல் இரவு என மாறி மாறி வேலை பார்ப்பது உடல்நலத்துக்கு நீங்கானது என்கிறர் ஆய்வு

காலை இரவு என்று வெவ்வேறு நேரங்களில் வேலை பார்க்கின்ற ஷி:ப்ட் முறை தொழிலாளிகளுக்கு கூடுதலான உடற்பருமன் மற்றும் உடல்நலக் கோளாறுகள் ஏற்படுவதாக இங்கிலாந்தில் நடத்தப்பட்டுள்ள புதிய ஆய்வு ஒன்று காட்டுகிறது. அத்தொழிலாளிகளுக்கு வயது அதிகமில்லை என்றாலும் கூட அவர்கள் ஆரோக்கியம் மோசமாவதை இங்கிலாந்து மக்களின் உடல்நிலை பற்றிய தகவல் திரட்டு காட்டுகிறது. வேலை உத்தரவாத ஒப்பந்தம் எதுவும் செய்துகொள்ளாமலேயே தொழிலாளர்கள் வேலை பார்க்க வேண்டிய சூழ்நிலை அதிகரித்து வருவதால் அதிகம் பேர் ஷி:ப்ட் வேலை பார்க்க நேரிடுகிறது என்றும், அது நாட்டு மக்களின் ஆரோக்கியத்தில் பெரிய பிரச்சனைகளை ஏற்படுத்தக்கூடும் என்றும் இந்த ஆய்வில் முக்கிய பங்காற்றியிருந்த ரேச்சல் கிரெய்க் கூறுகிறார்.

பகல் இரவு என மாறி மாறி வேலை பார்ப்பதென்பது உடல்நலத்துக்கு தீங்கானது என்பது தற்போது மிகவும் தெளிவாகி விட்டது என விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இங்கிலாந்தில் ஆண் தொழிலாளர்களில் 33 சதவீதம் பேரும் பெண் தொழிலாளர்களில் 22 சதவீதம் பேரும் ஷி:ப்ட் வேலைக்கு செல்பவர்களாக இருக்கிறார்கள் என சுகாதார மற்றும் சமூகப் பாராமரிப்பு தகவல் மையம் செய்துள்ள ஆய்வு கூறுகிறது.

காலை எழு மணிக்கும் மாலை ஏழு மணிக்கும் இடைப்பட்ட நேரத்திற்குள் வராத வேலை நேரங்களை ஷி:ப்ட் வேலையாக அவர்கள் கணக்கில் எடுத்துக் கொண்டுள்ளனர். இங்கிலாந்தில் காலை எழுக்கும் மாலை ஏழுக்கும் இடைப்பட்ட நேரத்தில் வேலை செய்யும் மக்களில் 24 சதவீதம் பேர் உடல் எடை அதிகம் கொண்டுவர்களாக இருக்கிறார்கள் என்றால் ஷி:ப்ட் தொழிலாளிகளிடையே இது 30 சதவீதமாக உள்ளது. அதேபோல முதுகுவலி, நீரிழிவு நோய் போன்ற பாதிப்புகளும் ஷி:ப்ட் தொழிலாளர்களிடையே அதிகமாக உள்ளது என கண்டறியப்பட்டுள்ளது.


# Math & physics Tutoring

## (For High School Students)

**Week Days Evenings & Weekend Classes**

***திங்கள் முதல் வெள்ளி நாட்களில்***
***மாலை 7.00 மணி முதல் 9.00 மணி வரை***
***சனி ஞாயிறு தினங்களில் காலை 9.30 மணி முதல்***
***வகுப்புக்கள் நடைபெறுகின்றன.***



*Math: Grade 9 - 11 - Advanced Functions Calculus & Vectors and Data Management.*

*Physics: Grade 11 & 12*

***கணித வகுப்புக்கள் தரம் 9 முதல் 12 வரை***
***பௌதீகவியல் வகுப்புக்கள் தரம் 11 முதல் 12 வரை***

**Instructor: S. Elancheliyan *(இளஞ்செழியன்)***

B. Sc (Sri Lanka) B. Eng (Canada)

**Location: North of Bovaird on Brisdale - Brampton**

**Tel: 416-524-0424**

# யார் ஆட்சிக்கு வந்தாலும் எமது பிரச்சனைகளில் மாற்றம் இல்லை எனக் கருதும் யாழ்ப்பாண மக்கள்

யார் ஆட்சிக்கு வந்தாலும் தமது பிரச்சினைகளில் மாற்றம் ஏற்படாது என வடக்கில் வாழும் தமிழ் மக்கள் கருதுகின்றனர். உள்நாட்டுப் போர் முடிவடைந்ததானது தமக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற போதிலும் தமக்கான சுதந்திரம் இன்னமும் எட்டப்பட வில்லை என வடக்கில் வாழும் தமிழ் மக்கள் ஆதங்கப்படுகின்றனர். இவ்வாறு சண்டே லீடர் ஆங்கில ஊடகத்தில் Camelia Nathaniel எழுதியுள்ள கட்டுரையில் தெரிவித்துள்ளார்.

சிறிலங்காவில் அடுத்த மாதம் இடம் பெறவுள்ள அதிபர் தேர்தலுக்கான ஆயத்தங்கள் நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் மேற்கொள்ளப்படுவதுடன் கொழும்பில் பிரதான வேட்பாளர்களுக்கான பரப்புரைகள் இடம் பெறும் அதே வேளையில இந்த நிலையானது யாழ்ப்பாணத்தில் முற்றிலும் வேறுபட்டுள்ளது.

யார் ஆட்சிக்கு வந்தாலும் தமது பிரச்சினைகளில் மாற்றம் ஏற்படாது என வடக்கில் வாழும் தமிழ் மக்கள் கருதுகின்றனர். உள்நாட்டுப் போர் முடிவடைந்ததானது தமக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற போதிலும் தமக்கான சுதந்திரம் இன்னமும் எட்டப்பட வில்லை என வடக்கில் வாழும் தமிழ் மக்கள் ஆதங்கப்படுகின்றனர்.

வடக்கில் வீதிகள் அபிவிருத்தி செய்யப்படுகின்ற போதிலும் தமிழ் மக்களின் வாழ்வாதாரமானது இன்னமும் மந்த நிலையிலேயே உள்ளதாகவும் இது சில இடங்களில் மிகவும் மோசமாக உள்ளதாகவும் மக்கள் முறையிடுகின்றனர். சிறிலங்காவின் வடக்கில் சட்டம் மற்றும் ஒழுங்கு சீர்குலைந்துள்ளன. சட்ட அமுலாக்கல் அதிகாரிகளுக்கு இலஞ்சம் வழங்குவதன் மூலம் எந்தவொரு குற்றவாளியும் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியும் என குற்றம் சாட்டப்படுகிறது.

வடக்கில் குற்றச்செயல்கள் மேலும் அதிகரிக்கிறன. பிணையில் விடுவிக்கப்படும் குற்றவாளிகள் மிகவும் சுதந்திரமாக நடமாடுவதாகவும் இதனால் குற்றவாளிகள் மேலும் மேலும் குற்றங்களில் ஈடுபடுவதாகவும் மக்கள் விசனம் தெரிவிக்கின்றனர்.

எது எவ்வாறிருப்பினும் தடுப்பு நிலையங்களில் வசதிக் குறைபாடுகள் காணப்படுவதால் குற்றவாளிகளை பிணையில் விடுவிக்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளதாக சிறிலங்கா காவற்துறையினர் கூறுகின்றனர்.

இதேவேளையில் சிறிலங்காவின் வடக்கில் உள்ள பல வளாகங்கள் மற்றும் பெருமளவான இடங்கள் பாதுகாப்புப் படையினரின் கட்டுப்பாட்டில் உள்ள போதிலும் இவற்றில் தடுப்பு முகாங்களை அமைப்பதற்கான ஏற்பாடுகள் எதையும் சிறிலங்கா அரசாங்க அதிகாரிகள் முன்னெடுக்கவில்லை என மக்கள் குற்றம் சுமத்துகின்றனர்.

பெரும்பாலான நீதிமன்ற வழக்குகள் குறிப்பாக பாலியல் வன்புனர்வு வழக்குகள் பல ஆண்டுகளாக தீர்க்கப்படாது நிலுவையிலுள்ளதாகவும் இதனால் பாதிக்கப்பட்டவர்கள் உளவியல் ரீதியான பாதிப்புக்களைச் சந்திப்பதாகவும் மக்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பானது தமிழ்மக்களுக்கு உதவி செய்வதற்குப் பதிலாக சிறிலங்கா அரசாங்கத்தை எதிர்ப்பதில் ஆர்வங் காட்டுவதுடன் அபகீர்த்தியை ஏற்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்கிறதே தவிர தமிழ் மக்களின் பிரச்சினைகளை முதன்மைப் படுத்தி அவற்றைத் தீர்ப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்வதில் எவ்வித அர்ப்பணிப்பையும் காண்பிக்கவில்லை என மக்கள் கருதுகின்றனர்.

காங்சேன்துறை தொடக்கம் மயிலிட்டி வரையான பிரதேசங்களிலிருந்து 1991-92 காலப்பகுதியில் இடம்பெயர்ந்த மக்கள் இன்னமும் அவர்களது சொந்த இடங்களில் மீள்குடியேற்றப்படவில்லை என யாழ்ப்பாணத்தில் செயற்படும் முதன்மையான கத்தோலிக்க மதகுரு ஒருவர் தெரிவித்துள்ளார்.

சிறிலங்கா இராணுவமானது துறைமுகம் மற்றும் விமானநிலையத்தை விரிவுபடுத்த வேண்டிய தேவையிலுள்ளது என்பதை நான் விளங்கிக் கொள்கிறேன். ஆனால் இவ்வளவு பெரிய நிலப்பரப்பு இவர்களுக்குத் தேவையா? ஏன் சிறிலங்கா இராணுவத்தினர் மக்கள் மத்தியில் தமது இருப்பிடங்களை அமைக்க முடியாது? சிறிலங்கா இராணுவப் புலனாய்வு வலைப்பின்னலானது நாட்டில் செயற்பட்ட பயங்கரவாதத்தை வெற்றி கொள்வதற்காகத் திறம்படச் செயற்பட்டுள்ளனர். எனினும் மக்களின் வாழ்விடங்களைக் கையகப்படுத்தி மக்களை அவர்களது சொந்த இடங்களிலிருந்து வெளியேற்றுவதன் மூலம்





மக்களின் மனங்களை ஒரு போதும் வென்று விட முடியாது. வடக்கில் மதுப்பாவனை அதிகரித்து விட்டது. இதே போன்று குற்றச் செயல்களும் அதிகரித்துள்ளன. நாட்டின் நிர்வாகம் தொடர்பில் மக்கள் அவநம்பிக்கை கொண்டுள்ளனர். சிறிலங்கா அரசாங்கமோ இராணுவமோ அல்லது தமிழ்த் தேசியக் கூட்டமைப்போ தமக்கு உதவவில்லை என மக்கள் கருதுகின்றனர்' என கத்தோலிக்க மதகுரு சண்டே லீடர் ஊடகத்திடம் மேலும் சுட்டிக் காட்டினார். சிறிலங்கா அரசாங்கம் தொடர்பாகவும் போர் முடிவடைந்து ஐந்து ஆண்டுகளின் பின்னர் தற்போது நிலைமை எவ்வாறு உள்ளது என்பதையும் 'சண்டே லீடர்' ஊடகமானது மக்களிடம் வினவியுள்ளது. மக்கள் தமது கருத்துக்களைப் பின்வருமாறு பகிர்ந்து கொண்டுள்ளனர்:

### ரமேஸ் தோமஸ்:-

தமிழ் மக்கள் மிகவும் உயர்வான ஒரு அரசியல் மாற்றத்தை எதிர் பார்த்தனர். தமிழ் மக்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பில் நம்பிக்கை கொள்ளவில்லை. ஆனால் கூட்டமைப்பு மட்டுமே தமிழ் மக்கள் முன்னுள்ள ஒரேயொரு தெரிவாகும் என்பதாலேயே இதற்கு மக்கள் ஆதரவளிக்கின்றனர். நாங்கள் டக்ளசுக்கு எமது ஆதரவை வழங்க விரும்புகிறோம். ஆனால் அவர் அரசாங்கத்திலுள்ளார். எங்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. நிச்சயமாக ஒரு மாற்றம் வேண்டும் என்பதே எமது விருப்பமாகும். சிறிலங்கா அரசாங்கமானது வீதிகளை அபிவிருத்தி செய்துள்ள போதிலும் இதன் மூலம் மக்கள் எதனையும் அடையவில்லை.

போரின் போது தமிழ் மக்கள் பல்வேறு துன்பங்களை அனுபவித்தனர். வீதிகள் மற்றும் தொடருந்துப் பாதைகளைப் புனரமைப்பது மட்டும் போதியதல்ல. நாங்கள் எமது சொந்த நிலத்தை நாமே ஆள விரும்புகிறோம். எங்களுக்கு தனியொரு நாடு அல்லது ஈழம் தேவையில்லை. ஆனால் எங்களுக்கு எது தேவை என்பதும் எமது உணர்வுகளும் தமிழர்களாகிய எமக்கு மட்டுமே தெரியும். வடக்கில் எமது மக்களின் பிரச்சினைகளை அடையாளங் கண்டு அவற்றை நிறைவு செய்யக்கூடிய பிரதிநிதிகள் எமக்குத் தேவை. உயர் பாதுகாப்பு வலயங்களிலுள்ள மக்களின் நிலங்களை சிறிலங்கா இராணுவம் கையகப்படுத்தியுள்ளது. இதனால் மக்கள் நிர்க்கதியடைந்துள்ளனர். எமது வீடுகள் என அழைப்பதற்கு எமக்கென ஒரு இடம் இல்லாத அதே வேளையில் எமது நிலங்களில் சுற்றுலா விடுதிகள் அமைக்கப்படுகின்றன. இது நீதியற்றது. தமது அவாக்களை நிறைவு செய்யக்கூடிய ஒரு அரசாங்கம் வேண்டும் என்பதையே தமிழ் மக்கள் எதிர்பார்க்கின்றனர். போர் முடிவடைந்து விட்டது. ஆனால் நாங்கள் தற்போதும் அச்சத்துடனேயே வாழ்கிறோம். நாங்கள் சுதந்திரமாக எமது கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கான உரிமையைக் கொண்டிருக்கவில்லை. எமது அடிப்படை உரிமைகளை வழங்குமாறே நாம் கேட்கிறோம் தெற்கிலும் தமிழ் மக்கள் வாழ்கின்றனர் என சிலர் கூறலாம். ஆனால் அவர்கள் தமக்கென நிலங்களை வாங்கியோ அல்லது வாடகை நிலங்களிலோ வாழ்கின்றனர். ஆனால் இங்கே இராணுவத்தினர் எமது நிலங்களை அபகரித்துள்ளனர். எமது நிலங்களில் அவர்கள் வாழ்கின்றனர். நாங்கள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்த எமது சொந்த நிலங்களிலிருந்து எங்களை அவர்கள் துரத்தி விட்டனர். நாவற்குழியில் சிங்களவர்களைப் பலவந்தமாகக் குடியேற்றியுள்ளனர்

### இராஜேஸ்வரன்:-

தேக்கநிலை மற்றும் தொழில் வாய்ப்பின்மை போன்றன எமது வாழ்வை மேலும் கடினமாக்கியுள்ளன. நாங்கள் கடந்த காலத்தில் மிக மோசமான பிரச்சினைகளுக்கு முகங்கொடுத்தோம். கடந்த காலத்தில் எமக்கான தேவைகளைப் பெற்றுக் கொள்வதற்கான மிகவும் உயர்வான நம்பிக்கை எம்மிடம் இருந்தது. ஆனால் சிறிலங்கா அரசாங்கம் எதனையும் எமக்குத் தரவில்லை. இதனால் நாங்கள் முன்பிருந்ததை விடத் தற்போது மிகவும் மோசமான நாட்டில் வாழ்கிறோம். நாட்டின் அரசியலில் நல்லதொரு மாற்றம் வர வேண்டும் என மக்கள் கருதுகின்றனர். அடுத்து நாட்டை ஆளவுள்ள அதிபர் தமிழ் மக்களுக்கு நலன் பயக்கும் தீர்வை முன்வைப்பாரா என்பது எமக்குத் தெரியாது. ஆனால் நாங்கள் நம்பிக்கையுடன் வாழ்கிறோம்.

வடக்கு மற்றும் கிழக்கில் வாழும் மக்களுக்கு சிறிலங்கா அரசாங்கமானது நிறையச் செய்திருக்க முடியும். ஆனால் கெட்டவாய்ப்பாக ஊழல் மற்றும் மோசடி போன்றன நாட்டில் அதிகரித்துள்ளன. இதனால் மக்கள் அதிருப்தியடைந்துள்ளனர். இதனால் சிறிலங்கா அரசாங்கம் தேர்தலில் வெற்றி கொள்ள முடியாது. போர் இடம்பெறும் போது இருந்த நாட்டை விட தற்போது சிறிலங்காவானது மிகவும் மோசமான நாடாக மாறி விட்டது. தமிழீழ விடுதலைப் புலிகள் அவர்களது தோற்றத்திற்கான காரணம் என்ன என்பதை மறந்து அதிகாரம் மற்றும் பேராசை போன்றவற்றை முதன்மைப் படுத்தியதால் நாங்கள் அவர்கள் மீதும் அதிருப்தியடைந்திருந்தோம்.

எனது குடும்பம் நான்கு உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. நான் ஒரு விவசாமி. நான் 2001-2002 காலப் பகுதியில் நன்றாக உழைத்தேன். ஆனால் தற்போது எனது வருவாய் குறைந்து விட்டது. விவசாயிகளுக்கு பல்வேறு உதவிகளை வழங்க்வதாக அரசாங்கம் வாக்குறுதி வழங்கிய போதிலும் இதுவரை நாங்கள் எதனையும் பெறவில்லை. அரசாங்கம் நெல்விவசாயிகளுக்கே சிறிதளவு உதவிகளைச் செய்துள்ளது. ஆனால் எமக்கு எதனையும் தரவில்லை. இவ்வாறான சூழலால் நாம் நம்பிக்கை இழந்துள்ளோம். நாட்டின் ஆட்சி அதிகாரம் வேறொருவரிடம் மாறும் போது நாட்டில் செழுமையும் சமாதானமும் வரக் கூடிய நல்லதொரு சூழல் ஏற்படும் என நாம் நம்புகிறோம்"

### நவரட்ணம் பரமலிங்கம்:-

தற்போதைய சூழல் மற்றும் சிறிலங்கா அரசாங்கத்தின் நடவடிக்கைகளால் மக்கள் விசனமடைந்துள்ளனர். அரசாங்கத்திலுள்ளவர்கள் தமது குடும்பம் மற்றும் நெருங்கியவர்களை வளப்படுத்துவதில் மட்டும் ஆர்வங் காண்பிக்கின்றனர். அவர்கள் எமக்காக எதனையும் செய்யவில்லை. அவர்கள் வீதிகள் மற்றும் தொடருந்துப் பாதைகளை அமைத்து, கட்டுமாண வசதிகளை ஏற்படுத்துவது வரவேற்கத்தக்கது. ஆனால் மக்களிடம் எவ்வித வருவாயும் இல்லாது தமது குடும்பத்திற்கு உணவைக் கூட வழங்க முடியாத நிலையுள்ளபோது இவ்வாறான கட்டுமாண வசதிகள் இருந்தும் பயனில்லை. சொந்த வாகனங்களை வைத்திருக்கின்ற பணக்காரர்களுக்கு இவ்வாறான வீதிப் புனரமைப்பு பயனளிக்கும்.

ஆனால் ஏழை மக்களைப் பொறுத்தளவில் அவர்களுக்கு அவர்களது தேவைகள் நிறைவேற்றப்பட வேண்டும். நாங்களும் இந்த நாட்டின் குடிமக்களலல்லவா? தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிடம் இது தொடர்பாக நாம் கேட்கும் போது அரசாங்கம் தமக்கு அதிகாரத்தை வழங்கவில்லை எனவும் தமிழ் மக்களுக்கு நலன் பயக்கும் திட்டங்களை மேற்கொள்வதற்கான ஒதுக்கீடுகளை வழங்கவில்லை எனவும் கூறப்படுகிறது. ஆனால் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிடம் மக்களுக்கு சேவையாற்றுவதற்கான நிதி வழங்கப் படுவதாக அரசாங்கம் கூறுகிறது. அவர்கள் இதனை மக்களுக்கு உதவப் பயன்படுத்தவில்லை எனவும் கூறப்படுகிறது. இவ்வாறு ஒவ்வொருவரும் தம்மிடம் தவறெதுவுமில்லை எனப் பந்து எறிவதால் மக்களாகிய எமக்கு மேலும் துன்பத்தைத் தருகிறதே தவிர வேறொன்றுமில்லை.

எமது பிள்ளைகளுக்கு உணவு வழங்குவதற்கும் கல்வி வழங்குவதற்கும் நாங்கள் (40ம் பக்கம் பார்க்க)



உ
சுவாமியே சரணம் ஐயப்பா

# அருள்மிகு
# கனடா ஸ்ரீ ஐயப்பன் இந்து ஆலயம்
# CANADA SRI AYYAPPAN HINDU TEMPLE

635 MIDDLEFIELD ROAD, SCARBOROUGH, ON. M1V 5B8 TEL: 416-321-6104

## ஸ்ரீ ஆஞ்சனேயர் ஜெயந்தி தினத்தை முன்னிட்டு மஹா யாகமும், விஷேட உற்சவமும்

**21-12-2014 ஞாயிற்றுக்கிழமை காலை 10:00 மணி, மாலை 5:30 மணி**



மெய்யடியார்களே!

கனடா ஸ்ரீ ஐயப்பன் இந்து ஆலயத்தில் அருள் பாலித்துவரும் ஸ்ரீ ஆஞ்சனேய பெருமானுக்கு ஜெயந்தி தினத்தை முன்னிட்டு விசேட மஹாயாகமும், உற்சவமும் நடைபெறவுள்ளது. அடியார்கள் உங்கள் கைகளினால் யாக குண்டத்தில் பூர்ணாகுதியிட்டு பூரண பலன் பெற்றுக்கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

சனீஸ்வர தோஷமுடையவர்கள், ஆஞ்சனேயரை வழிபட்டால் மேன்மையான பலனையும், எதிலும் வெற்றியையும் அடையலாம்

ஆஞ்சனேயருக்குப் பிரியமான வெண்ணை, வெற்றிலை மாலை, வடை மாலை என்பன ஆலயத்தில் பெற்று உங்கள் நேர்த்திகளை நிறைவேற்றிக் கொள்ளலாம். உபயம் செய்ய விரும்பும் அடியார்கள் ஆலயத்தில் பதிவுசெய்து கொள்ளலாம்.

காலை, மாலை நடைபெறும் மஹாயாகத்திலும், உற்சவத்திலும், பங்குபற்றுவதுடன் ஆஞ்சனேயப் பெருமான் வீதிவலம் வரும் அருட்காட்சியையும் தரிசிக்குமாறு அன்புடன் அழைக்கின்றோம்.

## 1008 கலச சங்காபிஷேகம் 21-12-2014 ஞாயிற்றுக்கிழமை காலை 8:00 மணி

ஐயப்பன் மகர மண்டல விரத வழிபாட்டு காலப்பகுதியில் ஆண்டு தோறும் நடைபெறும் 1008 கலச சங்காபிஷேகம் 21-12-2014 ஞாயிற்றுக்கிழமை காலை 8:00 மணி முதல் 11:00 மணிவரை நடைபெறவுள்ளது. 1008 கலசங்களையும் அடியார்கள் தனித்தனி உபயமாக பதிவு செய்து பூஜிக்கப்பட்ட கும்பங்களை உங்கள் கைகளால் சுமந்து வந்து ஐயப்பனுக்கு அபிஷேகித்து பூரணை நற்பலனை பெற்றுய்யும் வண்ணம் அன்புடன் வேண்டுகின்றோம்.

## விநாயகர் ஷஷ்டி உற்சவம் (பூர்த்தி)



**26-12-2014 வெள்ளிக்கிழமை**

விநாயகர் ஷஷ்டி பூர்த்தி உற்சவத்தை முன்னிட்டு 26-12-2014 வெள்ளிக்கிழமை மாலை 5:00 மணி முதல் 10 கும்ப அபிஷேகம், பூஷைகள் நடைபெற்று விநாயகப்பெருமான் வீதிவலம் வரும் நிகழ்வும் நடைபெறவுள்ளது. அடியார்கள் அபிஷேகம், மோதக பூஜை உபயம் செய்யவிரும்புபவர்கள் ஆலயத்தில் பதிவுசெய்யவும்.

## திருவெம்பாவை உற்சவம்

**26-12-2014 வெள்ளிக்கிழமை முதல் 04-01-2015 ஞாயிறு வரை**

மார்கழித் திருவெம்பாவையை முன்னிட்டு சிவன், அம்பாளுக்கு காலை 5:00 மணிக்கு விசேட அபிஷேகமும் திருவெம்பாவைப் பூஜையும் நடைபெறவுள்ளதால் அடியார்கள் தவறாது கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கின்றோம்.

## நெய்நிரப்புதல்

மாலையணிந்து விரதமிருந்து சபரிமலை செல்லும் ஐயப்ப சுவாமிமார்களுக்கான நெய் நிரப்பும் வைபவம்
25-12-2014 வியாழக்கிழமை, 26-12-2014 வெள்ளிக்கிழமை காலை 9:00 மணி முதல் மாலை 5:00 மணி வரை
நடைபெறும். அடியார்கள் கலந்துகொண்டு உங்கள் நேர்த்திகளை நிறைவேற்றிக்கொள்ளலாம்

## வாகன விபத்தில் காயமடைந்துவிட்டீர்களா?



அனுபவசாலிகளின் ஆலோசனை பெற்றபின் உங்கள் முடிவை எடுங்கள்!

**FIREMAN STEINMETZ**
PERSONAL INJURY LAWYERS

CERTIFIED AS A SPECIALIST IN CIVIL LITIGATION
SPECIALIZING IN SERIOUS PERSONAL TRAUMATIC INJURIES AS RESULT OF A
**MOTOR VEHICLE ACCIDENT**
FRACTURES - SPINAL CORD INJURY - BRAIN OR HEAD INJURY
SCARRING OR DISFIGUREMENT - INTERNAL INJURIES OR DEATH



Jack J. Fireman Q.C. LLM.
Jack J. Fireman Q.C. has been voted to the "Most Frequently Recommended Lawyer"catergory in L'Expert since 1997 as voted by the his peers from Ontario



Harry F. Steinmetz
Mr. Steinmetz is a member of the Advocates Society, the Canadian Bar Association, the Metropolitan Toronto Lawyers Association and the Medico-Legal society.

**உங்களுக்குத் தெரியுமா?**

- நடந்த விபத்து உங்கள் தவறில்லாவிடின் உங்களால் பணமாக வலி, வருத்தம், வாழ்வில் இழந்த மகிழ்ச்சி ஆகியவற்றுக்காக பணமாக **$330,000.00** வரையும், சம்பள இழப்பீடுகள் அத்துடன் **$86,000.00** வரை இழப்பாகவும் மற்றும் பல்வகையான இழப்புகளுக்கு நஷ்டஈடுகள் பெறமுடியும்.
- நடந்த விபத்து உங்கள் தவறாக இருப்பின் உங்களால் **$86,000.00** வரையும் வருமான இழப்பீடாக வாரத்திற்கு **$400** வரையும் இன்னும் பலவகை இழப்பீடுகளையும் பெறமுடியும்.

**If the impairment catastrophic your claim can be:**
- Medical and Rehabilitation expenses up to **$1,000,000.00**
- Personal care expanses up to **$1,000,000.00**

**OVER 50 YEARS COMBINED EXPERIENCE**
**even if you are:**
unemployed - employed - passenger - pedestrian
cyclist - traveling in public transit - student - housewife

You may be eligible for benefits to THOUSANDS of dollars

*if you have optional insurance you can calm up to **$1,000.00** IRB'S-per week
வரை இழப்பதற்கு அனுமதியாதீர்கள்!

**இலவச ஆலோசனைகளுக்கு இன்றே அழையுங்கள்**

**தீபன்**

24 Hours Direct Line
(416) 505 - 9804
(416) 624 - 4751

Thiparanjan Sivarajalingam
Accident Benefit Specialist
Licensed Paralegal
(Member of The Law Society of upper Canada)
www.thipaninjuryclaim.com
thiparanjan@gmail.com



அனுபவம் இல்லாதவர்களின் ஆலோசனையின் கீழ் விழுந்திடாதீர்கள்

TORONTO SCARBOROUGH MISSISSAUGA


# ஜனாதிபதித் தேர்தல்:- தமிழ்மக்கள் பார்வையாளர்களா?

(11ம் பக்கத் தொடர்ச்சி) முந்தியதாகக் கூட இருக்கலாம். ஏனெனில் அரசாங்கத்தைத் தோற்கடிக்க தேவையான பெரும் எதிர்ப்பலை ஒன்றை பொது எதிரணி இனிமேற் தான் உருவாக்க வேண்டியிருக்கிறது.

ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சிக்குள் இருந்து மேலும் எத்தனை பேர் உடைத்தெடுக்கப்படுவார்கள் என்பதிலும் அது தங்கியிருக்கிறது.அப்படியொரு பேரலை உருவாகுமிடத்து இலங்கைத்தீவின் அரசியலானது முன்னெப்பொழுதும் ஏற்பட்டிராத ஒரு நிச்சயமற்ற கால கட்டத்தை நோக்கி செல்லக்கூடும். இச்சிறு தீவின் தேர்தல் வரலாற்றைப் பொறுத்த வரை இரு தரப்பு வேட்பாளர்களும் வாழ்வா சாவா என்ற ஓர் நிலையில் மோதிக்கொள்வது என்பது முன்னெப்போதும் ஏற்பட்டிராத ஒரு தோற்றப்பாடே.

**ஏறக்குறைய ஐந்தரை ஆண்டுகளுக்கு முன் நந்திக் கடற்கரையிலும் இப்படியொரு மோதல் நிகழ்ந்தது. ஆனால் அது ஒரு ஆயுத மோதல். அது ஒரே இனத்திற்குள் நிகழவில்லை. இரு வேறு இனங்களுக்கிடையில் அது நிகழ்ந்தது. இப்போது நிகழ்வது ஒரே இனத்திற்குள் நிகழும் இரண்டு வம்சங்களுக்கிடையிலான மோதல். இதில் தமிழர்கள் ஏறக்குறைய பார்வையாளர்களைப் போல காணப்படுகிறார்கள்.**

அண்மையில் கொழும்பில் இருந்து வந்த மூத்த தொழிற்சங்கவாதி ஒருவர் சொன்னார். ஜனாதிபதித் தேர்தலை பொறுத்த வரை தென்னிலங்கை நிலவரங்களோடு ஒப்பிடுகையில் வடபகுதியில் நிலைமை முற்றிலும் தலைகீழாக காணப்படுறது என்று. தென்னிலங்கையில் காணப்படும் கொதிநிலை விறுவிறுப்பு என்பவற்றோடு ஒப்பிடுகையில் வடபகுதி முற்றிலும் மாறாக அமைதியாக காணப்படுவதாகவும் அவர் சொன்னார். தமது தலைவிதியை தீர்மானிக்கக்கூடிய ஒரு தேர்தலைக் குறித்து தமிழ் மக்கள் பார்வையாளர்கள் போல காணப்படுகிறார்கள். நாடு இத்தகைய அர்த்தத்திலும் இரண்டாக பிரிந்தே காணப்படுகிறது. ஆயுத மோதல்கள் முடிவுக்கு வந்து ஐந்தரை ஆண்டுகள் ஆனபின்னரும் தமது தலைவிதியை தீர்மானிக்கும் ஒரு தேர்தலில் தமிழ் மக்களை பார்வையாளாக தள்ளி விடும் ஒரு நிலைமை தான் தென்னிலங்கை அரசியலில் காணப்படுகிறது.

தமிழ் மக்கள் தேர்தலை பகிசுஷ்கரிப்பார்களாக இருந்தால் அது பார்வையாளர் நிலை அல்ல. மாறாக அது பங்களிப்புத் தான். ஏனெனில் பகிசுஷ்கரிப்பும் ஒரு பங்களிப்புத் தான் தமிழ் மக்கள் தேர்தலை பகிஸ்கரிப்பார்களோ இல்லையோ தேர்தல் முடிவுகள் எதுவாயிருப்பினும் அது சிங்கள மக்களின் தலைவிதியை மட்டுமல்ல தமிழ் மக்களின் தலைவிதியையும் தீர்மானிக்கும். முஸ்லிம் மக்களின் தலைவிதியையும் தீர்மானிக்கும். அது மட்டுமல்ல அதற்கும் அப்பால் இப்பிராந்தியத்தின் அடுத்த கட்ட அரசியல் நகர்வுகளையும் அது ஏதோ ஒரு விதத்தில் தீர்மானிக்கும்.

# ஆட்சி மாற்றமும் தமிழ்மக்களின் பிரச்சனைகளுக்கான தீர்வும்

(14ம் பக்கத் தொடர்ச்சி) ஒரு தலைமையால் அல்லது தலைவர்களால் எவ்வாறு தமிழ் மக்களின் பிரச்சினைகளை தீர்ப்பதற்கான காத்திரமான நடவடிக்கைகளை எடுக்க முடியும்? சிங்கள மக்களின் முன்னால் உண்மைகளை மறைத்து வாக்குகளை பெற்ற பின்னர் தமிழ் மக்களின் விவகாரம் தொடர்பில் ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியுமா? இதற்கு சிலர் சொல்லும் பதில், எதிரணியில் சந்திரிக்கா இருக்கிறார். அவர் விடயங்களை தமிழ் மக்களுக்கு சாதகமாக மேற்கொள்வார். ஆனால் ஒரு வேளை ஆட்சிமாற்றம் ஏற்பட்டால்கூட புதிய அரசாங்கத்தில் சந்திரிக்கா தீர்மானிக்கும் ஒருவராக இருப்பார் என்பதற்கு எவ்வித உத்தரவாதமும் இல்லை. எனவே சந்திரிக்காவின் வாக்குறுதிகளை நம்பி கூட்டமைப்பு முடிவெடுப்பதும் உசிதமான ஒன்றல்ல.

இங்கு முக்கியமாக குறித்துக் கொள்ள வேண்டிய விடயம், இதுவரை மகிந்த ராஜபக்சவிற்கு ஆதரவு வழங்கி வந்த ஹெல உறுமய, மைத்திரிபாலவிற்கு ஆதரவு வழங்கும் முடிவை அறிவித்துள்ளது. விடுதலைப் புலிகளுக்கு எதிரான இறுதி யுத்தத்தின்போது ஹெல உறுமய ராஜபக்சவின் யுத்தத்திற்கு பெரும் ஆதரவாக இருந்தது. எவ்வகையிலாவது புலிகளை அழிக்க வேண்டும் என்பதில் விடாப்பிடியாக இருந்தது. அதன் பின்னர் ராஜபக்சவின் ஆட்சியில் செல்லப்பிள்ளையாக இருந்து வந்த ஹெல உறுமய தற்போது முரண்படுவதற்கு பின்னாலுள்ள உண்மையான காரணங்கள் என்வென்பதும் எவரும் அறியார். இந்த நிலையிலேயே ஆளும் அரசாங்கத்திலிருந்து முரண்பட்டு வெளியியேறியதுடன் ஆட்சி மாற்றத்திற்கும் ஹெல உறுமய ஆதரவு வழங்கி வருகிறது.

தற்போதிருக்கிற தென்னிலங்கை இனவாத சக்திகள் மத்தியில் மிகவும் வலுவானதும் தமிழர் விரோத சிந்தாந்த பின்னணியையும் கொண்டதுமான ஹெல உறுமயவின் பங்களிப்பில் ஒரு ஆட்சி மாற்றம் நிகழுமாயின் வரவுள்ள புதிய அரசாங்கம் தமிழர் விவகாரம் தொடர்பில் ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் எடுப்பதை ஹெல உறுமய அனுமதிக்குமா? ஒரு வேளை ஒரு ஆட்சிமாற்றத்திற்கான வாய்ப்பு தென்படுவதாக உணர்ந்ததன் காரணத்தினால் கூட ஹெல உறுமய எதிரணிக்கு ஆதரவு வழங்கும் முடிவை எடுத்திருக்கலாம். ஏனெனில் வலுவான இந்திய எதிர்ப்பு அதன் ஊடாக இந்தியாவின் அனுசரணையில் கொண்டு வரப்பட்ட 13வது திருத்தச்சட்டத்திற்கு எதிரான நிலைப்பாடு அதன் மூலம் தமிழ் மக்களுக்கு சாதகமாக அதிகாரப்பகிர்வு வழங்குவதற்கான எதிர்ப்பு என்னும் வகையில் ஒரு தெளிவான அரசியல் நிகழ்ச்சிநிரலை கொண்டிருக்கும் ஒரே தென்னிலங்கை அமைப்பு ஹெல உறுமயவாகும். எனவே ஹெல உறுமய கூட்டின் மூலம் பெறப்படும் வெற்றியின் கீழ், தமிழ் மக்களின் பிரச்சினை மீண்டும் இரண்டாம் பட்சமாக்கப்படுவதற்கான வாய்ப்புக்கள் இல்லையென்று கூறவிட முடியாது. எனவே தமிழ் மக்களை பொறுத்த வரையில் விடயங்களை பல கோணங்களிலும் அலசி ஆராய்ந்து முடிவெடுப்பதே புத்திசாதுர்யமான முடிவாகும்.

ஏனெனில் ஆட்சி மாறியதும் மீண்டும் தமிழ் மக்கள் புதிய தென்னிலங்கையை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருக்க முடியாது. அத்தகைதொரு சூழலில் இன்று ஜனநாயகம், நல்லாட்சி, சட்டவொழுங்கு என்றெல்லாம் பேசும் தென்னிலங்கையின் புத்திஜீவிகள், எவரும் தமிழர்களுக்காக பேசப் போவதில்லை. தமிழர்கள் நம்பவேண்டியது தங்களின் தந்திரோபாயம் தங்களின் புத்திசாலிததனம் ஆகியவற்றை மட்டுமே!



# MIDTOWN Honda

3400 Dufferin Street
Toronto, ON M6A 2V1

**Across from Yorkdale Mall**

**2015 Civic** LX AUTO — $0 down @ 2.99% **$65.00** weekly /w + tax LEASE FOR 48 MONTHS

**LEASE**

**2015 CR-V** LX 4WD — $0 down @ 1.99% **$81.00** weekly /w + tax LEASE FOR 48 MONTHS

**2015 Civic** LX AUTO — $0 down @ 3.99% **$68.00** /weekly FINANCE FOR 84 MONTHS /w + tax

**FINANCE**

**2015 CR-V** LX 4WD — $0 down @ 2.99% **$85.00** /weekly FINANCE FOR 84 MONTHS /w + tax



## Tony Siva

**647-269-0749**

tonymidtown@hotmail.com

## FOR TONY SIVA'S CLIENTS!!!



40" LED TV

OR

Limited time Offer
with the purchase of
USED & NEW vehicles
Finance or Lease only
Cannot be combined w/any other offer



SAMSUNG Galaxy 4 Tablet



*Seasons Greetings*
*& Happy New Year*
*to All my Clients & Friends*

HONDA certified
used vehicles
come with
6 Years or
120,000 km Warranty



## NO CREDIT BAD CREDIT NO PROBLEM!

**Used vehicles - HONDA, ACURA, LEXUS, AUDI, BMW, MERCEDES BENZ**

**Visit my website www.midtownhondausedcars.com**



# வீடு வாங்க / விற்க அல்லது வாடகைக்குப்பெற



**TORONTO**
Neilson / Mclevin
Condo Apt.
Bedrooms 2+1
Washrooms 2
$209,900



**MARKHA**
HWY 48 / 16th
Condo Townhouse
Bedrooms 4
Washrooms 2
$299,888



**TORONTO**
Neilson / Sheppard
Townhouse
Bedrooms 3
Washrooms 3
$349,900



**AJAX**
Rosslans / Bennett
Detached 2 Storey
Bedrooms 4 + 1
Washrooms 4
$499,900







## Kumar Selvaratnam

**Realtor**

**Dir 416 464 7228**

luckykumar640@gmail.com
www.kumarhomesforsale.com



RE/MAX Crossroads Realty Inc . Brokerage
1055 McNicoll Ave (Victoriapark / McNicoll)
Tel 416 491 4002





மேஷம்

உங்கள் ராசிக்கு தனம் புகழ் ஸ்தான அதிபதிகளாகிய சூரியன் புதன் செயல்பாட்டுக் கிரகமானசெவ்வாயின் அனுகூல பார்வை பெற்றுள்ளனர். இதனால் உங்களின் முயற்சி சிறப்பாக நிறைவேற பூர்வ புண்ணிய நற்பலன் துணை நிற்கும். பேசும் வார்த்தையில் நம்பிக்கையின் வெளிப்பாடு தெரியும். அக்கம் பக்கத்தவர் அதிக அன்பு பாராட்டுவர். நோய் தொந்தரவு குறைந்து ஆரோக்கிய உடல் நலம் பெறுவீர்கள். இல்லறத் துணையின் மனக்குறை சரி செய்வதால் அன்பு பாசம் காணப்படும்.


ரிஷபம்

உங்கள் ராசிக்கு மூன்றில் சனி ராகு பதினொன்றில் குரு அனுகூல அமர்வாக உள்ளனர். மனதில் தைரியமும் செயல்களில் புதிய உத்வேகமும் ஏற்படும். எவரிடமும் சகஜமாக பழகுவீர்கள். உறவினர்களின் வருகையால் வீட்டில் மகிழ்ச்சி அதிகரிக்கும். பூர்வ சொத்தில் கிடைக்கிற பணவரவு குடும்பத்தின் அத்தியாவசிய செலவுக்கு பயன்படும். இல்லறத் துணையின் கவனக்குறைவான செயல்களை பொறுத்துக் கொள்வீர்கள். தொழில் வியாபாரத்தில் இலக்கை அடைவீர்கள்.


மிதுனம்

உங்கள் ராசிக்கு தர்ம கர்ம ஸ்தான அதிபதிகளாகிய சுக்கிரன் புதன் அனுகூல பலன்களை அள்ளித் தருகின்றனர். பணவரவு அதிகம் பெற புதிய வாய்ப்பு உருவாகும். ஒருமுகத் தன்மையுடன் பணி புரிந்து நன்மை அடைவீர்கள். இளைய சகோதர வகையில் சிறு மனக்கிலேசம் ஏற்படலாம். வாகன பராமரிப்பு பணி கூடுதல் பணச் செலவை உருவாக்கும். புத்திரரின் நற்செயல் மனதை மகிழ்விக்கும். உடல் நலத்திற்கு ஒவ்வாத உணவு வகை உண்ண வேண்டாம்.


கடகம்

உங்கள் ராசிக்கு ஆதாய ஸ்தான அதிபதியாகிய சூரியனை புகழ் ஸ்தான அதிபதி குரு பகவான் அனுகூல அமர்வில் இருந்து பார்க்கிறார். மன உறுதியுடன் நற்செயல்களை நிறைவேற்றுவீர்கள். அவமரியாதையுடன் உங்களை பேசியவர் தன் குறை உணர்ந்து அன்பு பாராட்டுவர். தாய்வழி உறவினர் தேவையான உதவி வழங்குவர். உடல்நலம் சீராக சிறு அளவில் மருத்துவ சிகிச்சை தேவைப்படலாம். இல்லறத்துணையின் அன்பு பாசம் பரிபூரணமாக கிடைக்கும்.


சிம்மம்

இந்த வாரம் உங்கள் ராசிக்கு செவ்வாய் சனி ராகு தவிர அத்தனை கிரகங்களும் அனுகூல அமர்வில் உள்ளனர். மனதில் ஆன்மிக நம்பிக்கை அதிகரிக்கும். தன்னைச் சார்ந்தவர்களின் நலன் சிறக்க தேவையான உதவி, ஆலோசனை வழங்குவீர்கள். குடும்பத்தில் மங்கள நிகழ்வு உருவாகும். சிலர் புதிய வாகனம் வாங்க நல்யோகம் உண்டு. வழக்கு விவகாரத்தில் சாதகமான தீர்வு கிடைக்கும். இல்லறத் துணை விரும்பிய பொருள் வாங்கித் தருவீர்கள்.


கன்னி

உங்கள் ராசிக்கு ஆறு எட்டாம் இட அதிபதிகளான சுக்கிரன் குரு அனுகூல சஷ்டாஷ்டக அமர்வில் உள்ளனர். புதன் சனி ராகு அதிக நற்பலன் வழங்குகின்றனர். இதனால் நீங்கள் துவங்கிய செயல் எல்லாம் பொன்னாக துலங்கும். வீட்டுத் தேவை பூர்த்தியாகி குடும்பத்தில் மகிழ்ச்சி வளரும். நண்பருடன் சுற்றுலா சென்று வருவீர்கள். பூர்வ சொத்தில் அதிக பண வரவும் புதிய சொத்து வாங்குவதுமான விபரீத ராஜயோக பலன் உண்டு. எதிரி இடம் மாறிப் போவர். அன்பு பாசம் மனதை மகிழ்விக்கும்.


துலாம்

உங்கள் ராசிக்கு, எட்டாம் இடத்தில் சுக்கிரன் பதினொன்றாம் இடத்தில் கேது அனுகூல அமர்வாக உள்ளனர். மனதில் உருவாகிறதாழ்மை உணர்வுகளை விலக்குவதால் பணி சிறந்து நல்ல பலனைத் தரும். குடும்ப உறுப்பினர்களின் கருத்துகளுக்கு முக்கியத்துவம் தருவது ஒற்றுமை பலம் பெற உதவும். வாகனத்தில் மிதவேகம் பின்பற்றவும். புத்திரரின் செயல்பாடு மனவருத்தம் தரும். இறை வழிபாடு செய்யவும்.


விருச்சிகம்

உங்கள் உங்கள் ராசியில் உள்ள சுக்கிரன் தினகதி சுழற்சி கிரகமான சந்திரன் மட்டுமே, நற்பலன் வழங்குகின்றனர். மற்ற கிரகங்களின் அமர்வு, எதிர்மறையாக உள்ளது. இதனால் பேச்சு செயலில் நிதான குணம் பின்பற்ற வேண்டும். செலவுகளில் சிக்கனம் மேற் கொள்வதால் பணக்கடன் பெறுகிற சூழ்நிலை வராமல் தவிர்க்கலாம். அறிமுகம் இல்லாதவர்களுக்கு வீடு வாகனத்தில் இடம் தர வேண்டாம்.


தனுசு

உங்கள் ராசிக்கு பத்தாம் இடத்தில் சூரியன் புதன் அனுகூலமாக உள்ளனர். சுக்கிரன் ஆதாய ஸ்தான அமர்வில் அளப்பரிய நற்பலன் வழங்குகிறார். இஷ்ட தெய்வ அருளும் அதிர்ஷ்டமும் இணைந்து அதிக செல்வ வளம் பெற்றுத் தரும். வாழ்வு சுபிட்சமாக அமைந்து மனதில் நம்பிக்கை உணர்வை வலுப்படுத்தும். வாகன பயணம் இனிதாக அமையும்.


மகரம்

உங்கள் ராசிநாதன் செவ்வாய் முழு அளவிலும் சந்திரன் சுமாராகவும் நற்பலன் வழங்குகின்றனர். கடந்த நாட்களில் விடுபட்ட நன்மைகளை புதிய முயற்சியினால் பெறுவீர்கள். பேசுவதில் நிதானமும், சமயோசிதமும் பின்பற்ற வேண்டும். சுயகவுரவம் பேணுவதிலும் பணவரவு பெறுவதிலும் சம மனநிலை கொள்வீர்கள்.


கும்பம்

உங்கள் ராசிநாதன் செவ்வாய் ஆதாய ஸ்தானத்தில் இருந்து நான்காம் பார்வையால் வாக்கு ஸ்தானத்தை பார்க்கிறார். சனி ராகுவின் பார்வையும், வாக்கு ஸ்தானத்தில் பதிகிறது. எவரிடமும் நிதானித்து பேசுவதால் மட்டுமே சிரமம் அவப்பெயர் வராமல் தவிர்க்கலாம். சுக்கிரன் கேது நல்லவிதமான அமர்வில் உள்ளனர். இறைவழிபாடு அவசியம்.


மீனம்

உங்கள் ராசிக்கு இந்த வாரம் சுக்கிரன், குரு சனி ராகு அளப் பரிய வகையில் நற்பலன் வழங்குகின்றனர். இனிய வார்த்தை பேசி நண்பரி டம் நல்ல மதிப்பு மரியாதை பெறுவீர்கள். அலைச்சல் பயணம் தவிர்ப்பதால் பணி திட்டமிட்டபடி நிறைவேறும்.


# கடன்தொல்லை?

PAST DUE
Your statement is enclosed.

நாங்கள் ஒரு புதிய ஆரம்பத்திற்கு வழிகாட்டுகிறோம், இனி

- நிம்மதியான தூக்கம்
- மீண்டும் தொலைபேசி அழைப்புகளுக்கு பதிலளிக்கலாம்
- ஏக்கத்தை விட்டொழிக்கலாம்
- உங்கள் மேலிருக்கும் அந்தச்சுமையை அகற்றிவிடலாம்
- உங்களைப் பற்றி பெருமையாயும், ஆனந்தமாயும் உணருங்கள்
- இனி கட்டவேமுடியாத Billகளைப்பற்றி கவலையில்லை.
- நண்பர்கள், உறவினர்களிடம் கடன் வாங்கும் சிறுமையும் இனி இல்லை

- கடன் பிரச்சினையால் நிம்மதியற்ற வாழ்க்கையா?
- நாளாந்த வாழ்கை கைநழுவிப் போகிறதா?
- வீடு, கார் பறிமுதலாகிவிடும்என்ற ஏக்கமா?
- Collection Agnecyயின் தொலைபேசி மிரட்டலா?
- உங்கள் சம்பளம் கடன் தந்தோரால் பறிமுதலாகும் என்ற கவலையா?



**CREDIT SOLUTION CENTRE**
Trustee in bankruptcy இணைந்து ஒரே கூரையின் கீழ் இயங்கும் ஒரு தமிழர் நிறுவனம்

80 Corporate Drive, Suite 309
Scarborough, ON M1H 3G5

அனைத்து கடன் பிரச்சினைகளுக்கான இலவச ஆலோசனைகளுக்கு
**SRI**
Tel: **416.439.0224**
Fax: 416.439.0226
creditsolutioncentre@gmail.com

digi

# அருள்வாக்கு ஸ்ரீ முத்துமாரி அம்மன் தேவஸ்தானம்

(Morningside & Lawrence)



ஸ்காபரோ **Morningside**இல் கடற்கரையை அண்டிய பச்சை மரம், செடி, கொடிகளால் சூழப்பட்ட அமைதியான சுற்றாடலை தன்னகத்தே கொண்டு அமைந்திருக்கும் அருள்மிகு ஸ்ரீ முத்துமாரி அம்மன் தேவஸ்தானத்தில், அம்மன் மனமுருகி வேண்டுவோரை தீராத நோய்கள், மனத்துன்பங்களில் இருந்து அருள்வாக்கு கூறி அருள்பாலித்துக் கொண்டிருக்கின்றாள். இக்கோவில் வவுனியா, சாஸ்திரி கூழாங்குளத்திலும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## அம்மன் அருள்வாக்கு

ஒவ்வொரு வாரமும் திங்கள், வெள்ளிக்கிழமைகளில் மாலை பூஜை 6:30 மணிக்கு பின்னரும் ஞாயிற்றுக்கிழமைகளில் காலை பூஜை 10:30 மணிக்கு பிற்பாடும் அம்மன் அருள்வாக்கு நடைபெற்று வருகின்றது என அடியார்களுக்கு அறியத் தருகின்றோம்.

## நாகதோஷ நிவர்த்தி

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் அடியார்கள் தங்கள் கைகளால் புற்றுக்குள் வீற்றிருக்கும் நாகம்மாளுக்கு பால் வார்த்து, அதனைத் தொடர்ந்து நடக்கும் கூட்டுப் பிரார்த்தனையிலும் ஈடுபட்டு வருகின்றனர். திருமணம், கல்வி, தொழில், குழந்தைப்பேறு போன்றனவற்றிற்கு தடையாக இருக்கும் ராகு, கேது பகவானின் தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டுடன் இப்பரிகாரம் அம்மனின் சன்னிதியில் சிறப்பாக நடைபெறுகின்றது.



ஆலயத் தொடர்புகளுக்கு

**647-638-2186**

arulvaakuamman@gmail.com

**ஆலயம் திறந்திருக்கும் நேரம்:**

காலை 8 - 1 மணி; காலை பூஜை 10:30

மாலை 5 - 9 மணி; மாலை பூஜை 6:30

**500 Coronation Drive, Scarborough, ON M1E 4V7**



வாகன விபத்து

MOTOR VEHICLE ACCIDENT

SKT PARALEGAL SERVICE

CRIMINAL MATTERS

SUMMARY

416.803.5296

Kalakalappu Theesan

கலகலப்பு தீசன்

SK THEESAN

TRAFFIC TICKETS

LICENCED PARALEGAL

sktheesan@gmail.com

MOTOR VEHICLE ACCIDENT

SERIOUSLY INJURED ?

ACCIDENT BENEFITS

PERSONAL INJURY



TRAFFIC TICKETS

DON'T MISS YOUR TRIAL DATE

LOSE YOUR POINTS

CRIMINAL CONVICTION

PERMANENT RESIDENT

CITIZENSHIP

SPONSORSHIP



CRIMINAL CHARGES ?

EXPERIENCED LAWYERS AVAILABLE

# யார் ஆட்சிக்கு வந்தாலும் எமது பிரச்சனைகளில் மாற்றம் இல்லை எனக் கருதும் யாழ்ப்பாண மக்கள்

(34ம் பக்கத் தொடர்ச்சி) பெரும் துன்பப்படும் அதேவேளையில், அதிகாரத்திலுள்ளவர்கள் அதிகாரத்தைத் தக்கவைக்கப் போராடுகின்றனர். நாங்கள் ஒரு பெருமை மிக்க இனம். நாங்கள் எமது வாழ்வுக்காக யாரையும் கெஞ்சவில்லை. நாங்கள் கடந்த காலத்தில் மிகவும் மகிழ்வாக வாழ்ந்தோம். ஆனால் இன்று மிருகங்களை விட மிகவும் மோசமாக வாழ்கிறோம். நாங்கள் 24 ஆண்டுகளுக்கு மேல் இடம்பெயர்ந்து வாழ்கிறோம். நாங்கள் எந்தவொரு நட்டஈட்டையோ அல்லது மாற்று நிலங்களையோ பெறவில்லை. எமது வழக்குகள் இன்னமும் நீதிமன்றங்களில் நிலுவையிலேயே உள்ளன. எமக்கு எப்போது நீதிமன்றம் நீதியை வழங்கும் என்பது கடவுளுக்கு மட்டும்தான் தெரியும்.

எமது நிலங்கள் பலாலி உயர் பாதுகாப்பு வலயத்தில் உள்ளது. இராணுவத்தினர் மிகவும் மகிழ்வுடன் சுற்றுலா விடுதிகளை அமைத்துள்ளனர். எமது நிலங்களிலிருந்து இராணுவம் வருவாயைப் பெறுகின்றனர். ஆனால் நாங்கள் நிலமற்றவர்களாக அலைந்து திரிகிறோம். யார் ஆட்சிக்கு வருவார்களோ என்பது எமக்குத் தெரியாது. நாங்கள் எல்லா அரசாங்கங்களின் மீதும் கட்சிகள் மீதும் நம்பிக்கையிழந்து வாழ்கிறோம்.

கடல் மற்றும் விவசாய நிலங்கள் உட்பட பல்வேறு வளங்கள் வடக்குப் பிரதேசத்தில் உள்ளது. ஆனால் சிறிலங்கா அரசாங்கம் தொழிலை மேம்படுத்துவதற்கான எவ்வித வளங்களையும் எமக்கு வழங்கவில்லை. கடந்த 25 ஆண்டுகளாக நாங்கள் விடுதலைப் புலிகளிடமிருந்தோ அல்லது அரசாங்கத்திடமிருந்தோ எதனையும் பெறவில்லை. நாங்கள் வெளிநாட்டு அரசாங்கங்களிடமிருந்து சில உதவிகளைப் பெற்றுள்ளோம். அரசாங்கம் பயங்கரவாதத்தை ஒழித்து சமாதானத்தை நிலைநாட்டியுள்ளது என்பதை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் அவர்கள் எமக்கு உதவி செய்யாது எம்மைப் பட்டினி போட்டு சாகும் நிலைக்குத் தள்ளுவதென்பது அரசாங்கத்தின் வெற்றிக்கு அர்த்தமற்றதாகும். எமக்கு இலவசமாக எதனையும் தருமாறு நாங்கள் கேட்கவில்லை. எமது நிலங்களையும் எமது வாழ்வை மீளக்கட்டியெழுப்புவதற்கான உதவிகளையும் எமக்குத் தருமாறு மட்டுமே நாங்கள் கேட்கிறோம்.

எமக்கெனத் தனிநாடு எதுவும் தேவையில்லை. ஆனால் நாங்கள் இழந்தவற்றை மீளப்பெறுவதற்கு குறிப்பிட்ட காலப்பகுதிக்குள் எமக்கான தன்னாட்சி உரிமையை அரசாங்கம் தரவேண்டும். இதன் மூலம் புலம்பெயர் தமிழர்கள் இங்கு வந்து வடக்கில் எமக்கான தொழில் வாய்ப்புக்களை அதிகரிக்க முடியும். தற்போதைய அரசாங்கத்தின் நடவடிக்கையால் புலம்பெயர் தமிழர்கள் வடக்கிற்கு வருகை தந்து முதலீடு செய்வதில் தயக்கம் காண்பிக்கின்றனர். பேராசை மிகுந்த அரசியல்வாதிகளுக்கு தமது பணத்தை விரயமாக்க புலம்பெயர் தமிழர்கள் விரும்பவில்லை. அவர்கள் தமிழ் மக்களுக்கு உதவ விரும்புகிறார்கள். தற்போதைய சிறிலங்கா அரசாங்கமானது தமிழ் மக்களின் வளர்ச்சிக்கு உத்வேகம் அளிக்காது அவர்களை அடக்கவே விரும்புகிறது.

**ஆசா:-**

நான் யாழ்ப்பாண மாநகர சபையில் பணி புரிகிறேன். மாலை ஆறு மணிக்குப் பிறகு பெண்களாகிய நாங்கள் வீதிகளில் பயணிக்க முடியவில்லை. தமிழீழ விடுதலைப் புலிகளின் காலப்பகுதியில் வழங்கப்படும் மிகவும் பயங்கரமான தண்டனைகள் காரணமாக குற்றங்கள் புரிவதற்கு மக்கள் அச்சப்பட்டனர். ஆனால் தற்போது காவற்துறையினர் குற்றங்கள் மற்றும் ஊழல்களைப் பார்த்துக் கொண்டு வாளாதுள்ளனர்.

இளம் சமூகமானது முற்றிலும் சீரழிந்து விட்டது. இவர்கள் தற்போது குழுக்களாக இணைந்து குற்றங்களில் ஈடுபடுகின்றனர். இது பெண்கள் மத்தியில் அச்சத்தை ஏற்படுத்துகிறது. நாங்கள் தெருக்களில் பயணிக்கும் போது எங்களை சிறிலங்கா காவற்துறையினர் மறித்து எமது ஆவணங்களில் பிழையிருப்பதாகக் கூறி இலஞ்சம் பெற முற்படுகின்றனர். ஐம்பது ரூபாவைக் கூட அவர்கள் இலஞ்சமாகப் பெறுகிறார்கள். சிறிலங்கா காவற்துறையின் நிலை அவ்வளவு மோசமாகி விட்டது. இங்கு சட்டம் மற்றும் ஒழுங்கு காணப்படவில்லை. குற்றங்களைத் தடுப்பதற்கான எவ்வித நடவடிக்கையையும் சிறிலங்கா காவற்துறை முன்னெடுக்கவில்லை. எமது கலாசாரம் சீர்குலைவது அவர்களுக்கு மகிழ்ச்சியாக உள்ளது. இங்கு யார் எந்தவிதமான குற்றங்களிலும் ஈடுபடலாம். அதற்காக காவற்துறையிடம் இலஞ்சம் கொடுத்து விட்டு சுதந்திரமாகத் திரியலாம். நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. ஒவ்வொரு வாரமும் பல குற்றங்கள் பதியப்படுகின்ற போதிலும் காவற்துறையினர் அமைதி காக்கின்றனர். பிற்பகல் 5.30 மணியளவில் காவற்துறையினர் தமது பணிகளை நிறைவு செய்கின்றனர்.

நாங்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிலும் நம்பிக்கை கொள்ளவில்லை. இன்றுவரை அவர்கள் இலஞ்சம் மற்றும் எமது கலாசார விழுமியங்கள் பாதிக்கப்படுதல் சட்டம் ஒழுங்கு சீர்குலைதல் போன்றவற்றை எதிர்த்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. மைத்திரிபால சிறிசேன தொடர்பாகவோ அல்லது வேறெந்த அதிபர் வேட்பாளர்கள் தொடர்பாகவோ நாம் எவ்வித கருத்துக்களையும் கொண்டிருக்கவில்லை. சில மாற்றங்களை இவர்கள் செய்வார்கள் என நாம் எதிர்பார்க்கிறோம்.

வீதிகள் அபிவிருத்தி செய்வது மட்டும் போதுமானதல்ல. இதற்கப்பால் ஒவ்வொரு துறையும் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும். வெற்று வாக்குகளை வழங்குவதற்குப் பதிலாக இதயசுத்தியுடன் கூடிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதையே யாழ்ப்பாண மக்கள் தற்போது எதிர்பார்க்கின்றனர்.

**(29ம்பக்கத் தொடர்ச்சி)** இன்றைய ஒருக்கிணைப்புக் குழுவின் கூட்டத்துக்கு சம்பந்தமில்லாது அழைத்து வரப்பட்ட வெளியாட்களும் ஈபிடிபி. உறுப்பினர்களும் அனுமதிக்கப்பட்டிருந்தமையும் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா தயாரித்து எடுத்துக் கொண்டு வந்த அரசியல் அறிக்கை வாசிக்கப்பட்டமையும் இது முற்கூட்டியே நன்கு திட்டமிட்டு குழப்பத்தை உண்டாக்குவதற்காக எடுக்கப்பட்ட முயற்சியாகவே கருதவேண்டியுள்ளது. இந்தத் தாக்குதலின் போது பாதுகாப்புப் பிரிவினர் ஈபிடிபி உறுப்பினர்களுக்கு பாதுகாப்பு வழங்கியதுடன் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உறுப்பினர்களுக்கு எவரும் பாதுகாப்பு வழங்கவில்லை என்பதும் கவலைக்குரியது' என்று மேலும் தெரிவித்தார்.

இந்தச் சம்பவம் குறித்து செய்தியாளர்களைச் சந்தித்த டக்ளஸ் வெளியாட்கள் எவரும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை என தெரிவித்துள்ளதுடன் கூட்டமைப்பினரே தமது இணைப்பாளர்கள் மற்றும் பிரதேச சபை தலைவர்கள் மீது தாக்குதல் நடத்தியதாகக் குற்றம் சுமத்தியிருக்கின்றார்.








**கனடிய அனலைதீவு ஸ்ரீ பூரணை புட்கலாம்பிகா சமேத**
**ஹரிஹர புத்திர ஐயனார் திருக்கோயில்**
22 GOODMARK PLACE, #13, ETOBICOKE, ON. M9W 6R2 TEL: 416-679-9899

**எதர்வரும் ஆலய நிகழ்வுகள்**

**ஸ்ரீ ஐயப்பன் மகரமண்டல விஷேட நிகழ்வுகள்**

12, டிசம்பர் – வெள்ளி மாலை – **திருவிளக்குப் பூஜை**
19, டிசம்பர் – வெள்ளி மாலை – **புஷ்பாபிஷேகம் (புஷ்பாஞ்சலி)**
24, டிசம்பர் – புதன் மாலை – **நெய் நிரப்புதல்**
26, டிசம்பர் – **வெள்ளி மதியம் சுவாமிமார்கள் படி ஏறுதல்**, நெய் அபிஷேகம், படிப்பூஜை தினமும் இரவு (மகரஜோதி தின இரவு வரை) தொடர்ந்து நடைபெறும்

- ஆஞ்சநேயர் ஜெயந்தி விழா – **21 டிசம்பர் ஞாயிறு மதியம்** விஷேட அபிஷேகம், பொங்கல், பூஜை
- ஸ்ரீ சங்கர நாத மகா கணபதி – **பெருங்கதை பூர்த்தி - 26, டிசம்பர் வெள்ளி மாலை**, "விநாயக சஷ்டி பூர்த்தி விழா"
- **திருவெம்பாவை ஆரம்பம் - 26 டிசம்பர் வெள்ளி அதிகாலை**
- **சனிப்பெயர்ச்சி மஹா ஹோமம், சாந்தி ஹோமம் -- 15, டிசம்பர் திங்கள் காலை 9:00 மணி முதல்**

**சகல பூஜைகளிலும் அனைத்து அடியார்களும் கலந்து கொண்டு ஐயன் அருளைப் பெறுவீராக**

இங்ஙனம்
ஐயனின் பணியில்
ஆலய அறங்காவலர் சபை
ஆலய பிரதம குரு

# மனதில் பதிந்த சித்திரங்கள் 20

*காட்டில் விறகு வெட்டல்*

*குசினி என்பது மண்ணால் எழுந்த*
*கூரை கிடுகால் வேய்ந்து இருந்தது*
*பசிக்கு அன்னம் அன்னை சமைத்து*
*புசிப்பீர் எனப் பரிமாற நின்றது*

*பூனை பதுங்கிப் தட்டாது இருக்க*
*ஏனை எலிகள் எற்றாது இருக்க*
*உறிகள் அங்கு பரணில் இருந்து*
*கறிகளோடு தொங்கி இருந்தது*

*நின்று சமைக்கும் குசினி அதனில்*
*அன்று விறகே ஒன்றே வேண்டும்*
*தென்னம் மட்டை பாளையோடு*
*பனையின் மட்டை என்பன வேண்டும்*

*நின்று எரியும் விறகாதலினால்*
*நன்று அதனைச் சேர்ப்பதற்கு*
*காட்டுக் காணி செல்லல் வேண்டும்*
*கூட்டிச் சென்றாள் அன்னை என்னை*

*மூன்று கட்டை நடந்து சென்ற*
*முதுசொம் ஆன காணி தன்னை*
*வயல் தரைகள் பலவும் கண்டு*
*விறுவிறுப்பொடு சேர்ந்து கொண்டோம்*

*வீழ்ந்து இருக்கும் பனையின் ஓல*
*தாழ்ந்து பொறுக்கிக் கங்கு வெட்டி*
*சேர்ந்து இருந்த ஓலை கழித்து*
*நடுவிருந்த தண்டு எடுப்போம்*

*தென்னம் பாளையும் வீழ்ந்திருக்கும்*
*அன்னை அவற்றைச் சேர் என்று ஏவும்*
*மாரிக்காலம் என்று சொன்னால்*
*பாரில் அதிகம் பாம்பு ஓடும்*

*புடையன் அங்கே சுருண்டிருக்கும்*
*பாளையிலே புகுந்திருக்கும்*
*உயிரை நானும் பிழைக்க வைத்து*
*பயிலும் வயதில் பாளை சேர்த்தேன்*

*தென்னம் மட்டை பாளை ஒன்றாய்*
*அன்னை சேர்த்துக் கட்டாய்க் கட்டும்*
*கருக்கு மட்டை ஒன்றாய்ச் சேர்த்து*
*நெருக்கமாக்கிச் சுருக்கிக் கட்டும்*

*தலையிலே சுமை ஏற்றிச் சற்றும்*
*நிலையிலே தடுமாற்றம் இன்றி*
*ஒருவர் பின்னே ஒருவர் ஆக*
*ஒற்றை அடிப் பாதை வழியே*

*தரை கடந்து வயல் கடந்து*
*அரை மணிக்கு மேல் நடந்து*
*வண்டி ஓடும் தெரு அடைந்து*
*கண்டிராத சுகம் அடைவோம்*

*சுமை இறக்கி ஆறிக் கொண்டு*
*அமையும் வீட்டில் நீரும் உண்டு*
*மீண்டும் சுமையைத் தூக்கிக் கொண்டு*
*வேண்டும் விறகு சுமந்து செல்வோம்*

*வண்டில் 'ட்ராக்டர் ' ஏதும் வந்தால்*
*மண்டியிட்டுக் கேட்டுக் கொள்வோம்*
*அவர்கள் எம்மை ஏற்றிச் சென்றால்*
*இறைவன் இரக்கம் கொண்டார் என்போம்*

*பாதிப் பேர்கள் கருணை கொள்ளார்*
*'பாவம் நாங்கள் என்ன செய்தோம்'*
*என்று நொந்து சுமந்து கொண்டு*
*அன்று வீடு சேர்ந்து கொள்வோம்*

*சுமையை இறக்கிப் போட்டு விட்டு*
*சுகத்தை நாங்கள் அனுபவிப்போம்*
*சுடவும் தேநீர் பருகி விட்டு*
*அடடா வாழ்வு இன்னது என்போம்*

*எட்டுப் பத்துப் பிள்ளை பெற்றால்*
*மட்டுப்படாத் துன்பம் வாட்டும்*
*அன்னை தந்தை மாடாய் உழைத்த*
*என்னே! யாகம் செய்தல் வேண்டும்*



சு.சிவதாஸ்





**International Students**

Now we accept international students

**New funds available under Canada Ontario Job Grant (COJG)**

STUDENT TESTIMONIALS

One of the reasons I got over $32,000 funding from second career to do a diploma program at JRS College of business and Health Care Inc. because I chose one of their lengthy program, Accounting and Payroll administration which is 45 weeks in duration.
Deepa

With the help of JRS College I got over $32,000 through Second Career to do 36 weeks of Early Childcare Assistant program. JRS College provide excellent service to students in many ways.
Suvarna

I am very happy that I chose JRS College of Business and Health Care Inc. to do my Personal Support Worker program because I am working full time in a well recognized nursing home in GTA. All of my other friends in the class are also working as well. I am very thankful to JRS College and the staffs.
Thusa

I am coming from Ajax and I have chosen Early Childcare Assistant and I got placement close to my home in Ajax. I was also offered employment at the same day care centre where I did my placement .I would strongly recommend JRS College for studies where they provide quality training.
Gnana

**10 Diploma Programs**

- Community Service Worker (52 Weeks)
- Accounting & Payroll Admin -PT (50 Weeks)
- Pharmacy Assistant (46 Weeks)
- Accounting & Payroll Admin (45 Weeks)
- Health office Administrator (40 Weeks)
- Early Childcare Assistant (36 Weeks)
- Personal Support Worker-PT (35 Weeks)
- Computerized Accounting (24 Weeks)
- Personal Support Worker (32 Weeks)
- Office Assistant (16 Weeks)

We open on Sundays 10.00 am - 1.00 pm

**Contact info**

(Midland & Finch)
330-4168 Finch Ave East
Scarborough, ON M1S 5H6
416-292-2455



(Registered as a Private Career College under the Private Career Colleges Act 2005.)

# அல்பிரட் துரையப்பா முதல் காமினி வரை -4





# ஆயுதம் தாங்கிய இளைஞர்கள் போராட்டம் அதன் பெயரால் அமுதரின் மகனுக்கு புகலிடம்

***(19.11.1994 தினமுரசில் அற்புதன் எழுதிய இத்தொடர் 20 ஆண்டுகளின் பின் நன்றியுடன் மீள் பிரசுரம் செய்யப்படுகிறது. இத்தொடர் முடியுமுன் அற்புதனின் ஆயுளும் துப்பாக்கிக் குண்டுகளுக்கு இரையாகி விட்டமை சோகமான பதிவாகும்)***

யாழ்.மேயர் அல்பிரட் துரையப்பா கொலைக்கு காரணம் தமிழ் புதிய புலிகள். ஆங்கிலத்தில் TNT என்று சுருக்கமாக அழைக்கப்பட்டனர். TNT என்ற பெயர் வெடி மருந்து ஒன்றையும் குறிக்கும்.

தமிழ் புதிய புலிகள் இயக்கத்தின் முக்கிய தலைவராக இருந்தவர் செட்டி. தனபாலசிங்கம் என்ற செட்டி யாழ்ப்பாணம் கல்வியங்காட்டைச் சேர்ந்தவர்.

தமிழர் விடுதலைக் கூட்டணியின் தலைவர்களில் ஒருவராக இருந்தவர் அடலேறு ஆலாலசுந்தரம். (இவர் தான் பின்னாளில் யாழ்.கூட்டுறவு சங்கத் தலைவராக இருந்து ஊழல் மோசடிகளில் ஈடுபட்டவர். விடுதலைப் புலிகளால் காலில் சுட்டு (22.02.83) எச்சரிக்கப்பட்டவர். இவர் கதையும் பின்பு சொல்லப்படும்.) ஆலாலசுந்தரமும் கல்வியங்காட்டைச் சேர்ந்தவர் தான்.

செட்டியை வைத்து பயன்படுத்தலாம் என்று நினைத்த ஆலாலசுந்தரம் செட்டி குழுவினரை அழைத்துப் பேசினார். 'தமிழ் புதிய புலிகள்' என்ற பெயரில் ஒரு குழுவாக இயங்குமாறு ஆலோசனை கூறினார்.

தமிழ் புதிய புலிகள் இயக்கத்தில் முக்கியமாக இருந்தவர்களில் சிலர் செட்டி, பிரபாகரன், சிவராசா, ரமேஷ், இன்பம், கண்ணாடி, பத்மநாதன், பற்குணராஜா, கலாபதி, கிருபாகரன், [illegible] ஆகியோர்.



தமிழ் புதிய புலிகள் மேற்கொண்ட நடவடிக்கைகளில் சில:

யாழ்.தெல்லிப்பழை கூட்டுறவு பண்டகசாலையில் 97 ஆயிரம் ரூபா கொள்ளை (1974), யாழ்.மேயர் அல்பிரட் துரையப்பா கொலை (1975),புத்தூர் வங்கியில் ரூபா ஏழு லட்சம் கொள்ளை (1976 மார்ச் 5). தமிழ் புதிய புலிகளின் சகல முக்கிய நடவடிக்கைகளிலும் பிரபாகரன் பங்கு கொண்டிருந்தார்.

தமிழ் புதிய புலிகளின் தலைவராக இருந்த செட்டி பின்னர் பொலிசாருக்கு தகவல் கொடுக்கும் நபராக மாறினார்.

சி.ஐ.டி.இன்ஸ்பெக்டராக இருந்த பத்மநாதன் செட்டியை தனது கைக்குள் போட்டுக்கொண்டார். செட்டி மூலமாக தீவிரவாத இளைஞர்களின் விபரங்கள் பத்மநாதனால் சேகரிக்கப்பட்டன. இதனால் வெறுப்புற்ற பிரபாகரன் செட்டியை தேடித் திரிந்தார்.

1981ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் கல்வியங்காட்டில் செங்குந்தா இந்துக் கல்லூரியருகே செட்டி சுட்டுக் கொல்லப்பட்டார்.

செட்டியை சுட்டுக்கொன்றவர் குட்டிமணி. அப்போது பிரபாகரனும் குட்டிமணி குழுவினரோடு இருந்தார்.

5.5.76 அன்று தமிழ் புதிய புலிகள் இயக்கத்தின் பெயர் மாற்றம் செய்யப்பட்டது. தமிழீழ விடுதலைப் புலிகள் (LTTE) என்னும் புதிய பெயர் சூட்டப்பட்டது.

தமிழீழ விடுதலைப் புலிகளில் முக்கியமானவர்களாக இருந்தவர்கள் பிரபா-கரன், உமாமகேஸ்வரன், நாகராசா, செல்லக்கிளி (இவர் செட்டியின் தம்பி) ஐயர், விச்சுவேஸ்வரன், ரவி ஆகியோர்.

துரையப்பாகொலையில் பங்கு கொண்ட பற்குணராசா என்னும் சரவணன் பிரபாகரனால் கொல்லப்பட்டார்.

மைக்கல் என்னும் இன்னொரு உறுப்பினரும் 1976ல் பிரபாகரனால் கொல்லப்பட்டார்.

இயக்க முடிவின்படியே மேற்கண்ட இருவரையும் பிரபா சுட்டுக்கொன்றார்.

ஆனால் அந்த முடிவுக்கு காரணமான சிலர் பின்னர் பிரபா மீது அவரது தனிப்பட்ட தவறு என்பது போல அக்கொலைகள் பற்றி சொல்லித் திரிந்தனர்.

பற்குணராசா என்ற சரவணனை பிரபாகரனிடமிருந்து தந்திரமாக அழைத்துச் சென்றவர்களில் ஒருவர் நாகராசா (வாத்தி). இவர் பின்னர் இயக்கத்திலிருந்து வெளியேறினார். வெளியேறிய பின்னர் பிரபாகரன் மீது கொலைகளுக்கான விமர்சனத்தை முன் வைத்தார்.

அதனால் கோபம் கொண்ட பிரபாகரன் தமிழ்நாட்டில் சென்னையில் இருந்த நாகராசாவை கடத்திச் சென்றார்.

அதன் பின்னர் தமிழ்நாட்டைச் சேர்ந்த 'நக்சலைட்' குழுக்களின் தலையீட்டாலும் தமிழக இரகசிய பொலிசாரின் முயற்சியாலும் நாகராசா விடுவிக்கப்பட்டார்.

புலிகள் இயக்க தலைவர்களாக அரசால் தலைக்கு விலை வைத்து தேடப்பட்ட முக்கியமான மூவர் பிரபாகரன், உமாமகேஸ்வரன், நாகராசா.

நாகராசா இயக்கத்தில் இருந்து வெளியேறி கடத்தல் தொழிலில் ஈடுபட்டு தற்போது செல்வந்தராக தமிழ்நாட்டில் இருக்கின்றார்.

இரகசியமான தலைமறைவு இயக்கத்தின் கட்டுப்பாட்டு விதிகள் நெகிழ்வானதாக இருக்கக்கூடாது என்று பிரபா நினைத்ததை முற்றிலும் தவறு என்று சொல்ல முடியாது.

இயக்கத்தை விட்டு விலகிய பின் இயக்கத்தில் இருந்தபோது மேற்கொண்ட நடவடிக்கைகளை வெளியே தெரிவிப்பது போராட்ட காலத்தில் பெரும் சேதங்களை ஏற்படுத்தும். கியூபா புரட்சியின் போது சேகுவேராவும் கட்டுப்பாட்டை மீறுவோர் தண்டிக்கப்படவேண்டும் என்பதை வலியுறுத்தினார். கட்டுபாட்டை மீறிய ஒரு போராளியை சேகுவேரா சுட்டுக் கொன்ற நிகழ்வும் கியூபா புரட்சியின் போது நடந்திருக்கின்றது.

உமா மகேஸ்வரனும் பிரபாகரனின் உட்கொலைகளை கண்டித்துப் பேசியவர்களில் ஒருவர்.

ஆனால் அவர் பின்பு புளொட் இயக்கத்தை தலைமை தாங்கி நடத்தியபோது புளொட் இயக்கத்தில் நூற்றுக்கணக்கான உட்கொலைகள் உமாவின் உத்தரவுப்படி நடந்ததாக புளொட் முக்கியஸ்தர்களே விமர்சித்தனர்.

இறுதியாகத் தனது இயக்க உறுப்பினரும் மெய்ப்பாதுகாவலருமான ஒருவராலேயே உமா மகேஸ்வரன் கொழும்பில் வைத்து கொல்லப்பட்டார். இனி துரையப்பா கொலைக்குப் பின் நடந்த சம்பவங்களுக்கு வருவோம்.

துரையப்பா கொலையைப் பற்றி விசாரணை செய்ய பொலிசார் பல முனைகளில் முயற்சிகளை மேற்கொண்டனர்.

தீவிரவாத இளைஞர்களை வேரோடு களையவேண்டும் என்ற முனைப்போடு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

இதே சமயம் துரையப்பா கொலையோடு தலைவர் அமிர்தலிங்கத்தின் மகன் காண்டிபனின் பெயரும் சேர்க்கப்பட்டது. காண்டிபனைத் தேடி பொலிசார் அலைந்தனர்.

துரையப்பாவை சுட்டது யார் என்பது கூட அமிர்தலிங்கம் சொல்லித் தான் காண்டிபனுக்குத் தெரிந்திருக்கும்.

ஆனாலும் காண்டிபனை பொலிசார் தேடிய வேகத்தைப் பார்த்த மக்கள் அமுதரின் மகனும் ஒரு வீரன் தான் என்று உள்ளுக்குள் சந்தோசப்பட்டனர்.

இதனால் அமுதருக்கு இருந்த மதிப்பும் உயர்ந்தது. காண்டிபன் இலண்டனுக்கு பத்திரமாகப் போய்ச் சேர்ந்தார்.

அவருக்கு அரசியல் அடைக்கலம் பெற்றுக் கொடுக்க பலத்த முயற்சிகள் நடந்தன.

இறுதியில் அரசியல் புகலிடம் கிடைத்தது. தமிழர்கள் சந்தோசப்பட்டார்கள். தேடப்பட்டவுடன் தப்பிஓடி அரசியல் புகலிடம் தேடுவதா?

அப்படியானால் இங்கே போராடும் இளைஞர்கள் சுவரொட்டி ஒட்டி தலைக்கு விலை வைத்து தேடப்படும் இளைஞர்கள் புத்தி கெட்டவர்கள் என்று தான் அர்த்தமா? என்றெல்லாம் தமிழர்களில் பலர் யோசிக்கவேயில்லை.

அந்தளவுக்கு அமுதர் மீது கண்மூடித்தனமான விசுவாசம் நிலவிய காலம் அது.

காண்டிபன், துரையப்பா கொலையில் தேடப்பட்டதால் ஏற்பட்ட இலாபங்கள் இரண்டு.

ஒன்று: அமுதர் குடும்பமே தியாகத்திற்கு தயாரான குடும்பம் என்ற பெருமை. அதனால் தளபதி என்ற பட்டம் அமுதருக்கு உறுதிப்படுத்தப் பட்டது.

இலாபம் இரண்டு: அந்தக் காலத்தில் இலண்டன் சென்று புகலிடம் பெறுவது சாதாரண காரியமல்ல. ஆனால் காகம் இருக்க பனம் பழம் விழுந்த கதையாக காண்டிபனுக்கு புகலிடம் சுலபமாகக் கிடைத்தது.

இலண்டனில் புகலிடம் தேடிய காண்டிபன் தமிழர்கள் போராட்டத்திற்கு அங்கிருந்து செய்த காரியம் என்ன வென்று கேட்டால் பதில் ஒன்றுமேயில்லை என்பது தான்.

அமுதரின் தியாகங்களை மறுத்துப் பேசுவது என் நோக்கமல்ல: தமிழர்களுக்குக் கிடைத்த ஆளுமையுள்ள உணர்ச்சிகரமான தலைவர் அவர்.

ஆனால் காண்டிபன் விடயத்தில் அமுதரின் போக்கு சரியானதாக இருக்கவில்லை.

அமுதரின் மகன் லண்டனில் புகலிடம் தேடிக்கொண்டார். வடக்கு - கிழக்கில் தீவிரவாத இளைஞர்கள் பொலிசாரின் தேடுதல் வேட்டைகளில் இருந்து தப்பித்துக் கொள்ள அங்கும் இங்கும் ஓடி அலைந்தார்கள்.

தேடுதலில் முன் நிற்கும் பொலிசாரை அழித்துவிடுவது தான் தப்பிக் கொள்ள வழி என்று தீவிரவாதக் குழுக்கள் முடிவு செய்தன.

குறிப்பாக தமிழ் பொலிஸ் அதிகாரிகள் மீது தான் இளைஞர்கள் அதிகமாகக் கோபப்பட்டார்கள்.

துப்பு துலக்குவதில் திறமையான பொலிஸ் அதிகாரி பத்மநாதன்.

சி.ஐ.டி. இன்ஸ்பெக்டரான பத்மநாதனின் வீடு நல்லூர் முடமாவடியில் இருந்தது.

1978 ஆம் ஆண்டு (திகதி - மாதம் நினைவில் இல்லை) சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் பத்மநாதன் வீட்டின் முன்பாக இளைஞர்கள் சிலர் காத்திருந்தனர்.

இரவு நேரம். வெளியே காரில் சென்றிருந்த பத்மநாதன் எப்படியாவது வீடு வந்து சேர்ந்தேயாகவேண்டும்.

இளைஞர்களிடம் பரபரப்பு,குறி சரியாக அமையவேண்டுமே என்றும் படபடப்பு.

இது புலிகள் குழுவினரல்ல. வேறு குழு.

தூரத்தில் கார் ஒன்றின் ஹெட்லைட் வெளிச்சம்.

இளைஞர்களின் இதயத்துடிப்பு அதிகரித்தது. பத்மநாதனிடமும் கைத்துப்பாக்கி இருந்தது.

(தொடரும்)


## இணுவில் திருவூர் ஒன்றிய அறிவித்தல்
## பொங்கல் விழா 2015

கனடா வாழ் இணுவில் மக்களின் 14ஆவது பொங்கல் விழா கனடா கந்தசுவாமி கோவில் மண்டபத்தில் 24-01-2015 சனிக்கிழமையன்று இடம்பெறவுள்ளது.

இவ்விழாவில் நிகழ்ச்சிகள் வழங்கவிரும்பும இணுவில் பிள்ளைகள் தங்கள் விபரங்களைத் தைப்பொங்கல் தினத்திற்கு முன்பாகத் தருமாறு கேட்டுக்கொள்கிறோம்.

தொடர்புகளுக்கு: 416-496-9071, 416-430-0422, 647-885-7407




கனடா ஸ்ரீ முத்துமாரி அம்மன் ஆலய வளர்ச்சிக்காக

நடாத்தப்படும் கலை நிகழ்ச்சிகளும் இராப்போசன விருந்தும்

# இராகமழை 2015

Aravinthan

Mega Tuners LIVE BAND

Airthalaya Academy of Fine Arts
Smt. Lalithanjana Kathirgaman

Nritya Dance Company

FEB 7 SAT 2015 @ 6pm

Tamil Isai Nattyakalaimanram
Sugirtha Suthagar

இரா தனபாலன் வழங்கும் லேட்டஸ் தரும்

அன்பளிப்பு $100 (for Family of 4)

At Mirage Banquet Hall 1917 Albion Road, Ontario M9W 2S8

ஆலயம்: 416-213-0110

---

ஈழநாடு
பிரதம ஆசிரியர்
T.K. பரமேஸ்வரன்
Tel: 416 841 9600
Email: eelanadu1993@gmail.com

KS WINDOW COVERING
Free Estimate | Free Installation | Only nstallation Available
Sangeetha: 416-270-9640
Kannan: 647-289-6483

KABI Express
துரித பணமாற்றுச் சேவை
WORLDWIDE
Kabi | Varathan | Geetha
416-244-9816 | 416-884-9816
174 Wright Ave, Toronto. On. M9N 3Z2

Kumaran Arasaratnam
Mortgage Agent
Tel: 416.671.8160

TOP TECH AUTOMOTIVE SERVICES LTD.
6160-08 NETHERHART ROAD
MISSISSAUGA, ON. L5T 2G6
Specialized in Lexus Toyota & Hybrid Vehicles
Call: Krish
(905)696-8324
(416)624-1752

பாதுகாப்பு. நிலைப்புத்தன்மை. வரலாறு.
Ajith Sabaratnam
Bus 416-439-2800
Cell 647-401-5800
ajith.sabaratnam@sunlife.com
www.sunlife.ca/ajith.sabaratnam
Sun Life Financial

Express Work Renovations
Electrical, Washroom, Kitchen, Basement, Plumbing
Janan
Vimal 647-871-5645

Century 21 Affiliate Realty Inc.
Tel: 416.290.1200
Cell: 416.666.4202
Fax: 416.290.1900
Email: visva99@yahoo.com
Visva Vythilingam
Sales Representative

Shakthy Studio
THE DREAMS FACTORY
Kiruba@416 841 6513

Kannan Maheshwaran
Cell: 647.829.7979
Bus: 416.284.5555

BS.KISHOR Transportation
647.654.3874

RSM

EXCELLENT CREATION
Bring Your Home To Life
Interior Works & Exterior Works
Plumbing & Washroom
Flooring & Painting
Vimal: 647-200-9670
Sabesh: 647-887-8349

ஈசன் சிகை அலங்கரிப்பு நிலையம்
Esan Beauty Salon

TOYOTA
Don Valley North Toyota Scion
ISO 9001:2008
3300 Steeles Avenue East
Markham, Ontario L3R 1G9
www.donvalleynorthtoyota.com
www.donvalleynorthscion.com
Toll Free: 1.800.663.8658
Tel: 416.798.7188 x222
Tel: 905.475.0722 x222
Fax: 905.475.5102
Cell: 416.953.6445
shanm@dvntoyota.com
Shan Manojkumar
Pre-owned Sales Consultant

CENTUM Advance Realty Inc.
Thusi Sivarajah
Tel: 416.290.1200
416.837.1549
BEST MORTGAGE RATE IN TOWN

Shri Muththumaari Amman Temple
Morning 9:00 a.m. | Morning 9am - 1pm
Afternoon 12:00 p.m. | Evening 5pm - 9pm
Evening 7:30 p.m.
www.shrimuththumaari.com
Facebook / Canada Shri Muththumaari Amman

# விடுதலைப் போராட்டங்கள் என்றுமே வீழ்ச்சி அடைந்ததில்லை! இனப்படுகொலை ஆவண நூலாசிரியர் இராமு.மணிவண்ணன்

(31ம் பக்கத் தொடர்ச்சி) ஸ்ரீலங்காவின் பொருளாதாரத்தை உடைக்க வேண்டும். 1930ல் மகாத்மா காந்தி வெளிநாட்டு பொருட்களின் இறக்குமதியை புறக்கணித்தார். அதனால் முதலாளித்துவம் பாதிப்படைந்தது.

பன்னாட்டு விசாரணைகள், நீதி விசாரணைகள் ஆகியன அவசியம் என்பதனை நாம் கருத்திற் கொண்டு செயற்பட வேண்டும். ஐ.நா.வினால் மேற்கொள்ளப்படும் அரசியல் நடவடிக்கைகளுக்கு நாம் தொடர்ந்து பரிணாமிக்க வேண்டும். நாம் அரசியல் விழிப்புணர்வுக்கு வெளிச்சமாக இருக்க வேண்டும் என்பதனைக் கருத்திற் கொண்டே இந்நூலை எழுதினேன். ஈழத்தமிழர்கள் புலம் பெயர்ந்த தமிழர்கள் ஆகியோருடன் கடந்த முப்பதாண்டு காலமாக நானும் இணைந்து செயற்பட்டு வருகின்றேன். ஸ்ரீலங்காவில் இடம் பெற்றது இனப் படுகொலை தான் என்பதனை உலக நாடுகளுக்கு நிரூபிக்கும் வகையில் கடந்த ஐந்தாண்டு காலமாக சாட்சியங்களையும் ஆதாரங்களையும் திரட்டி அவற்றை ஆவணப் படுத்தும் வகையில் "Sri Lanka Hiding the Elephant" என்ற ந்நூலினை எழுதி வெளியிட்டேன்".

திரு.தங்கவேலு அவர்கள் தலைமை உரை நிகழ்த்திய போது "பேராசிரியர் ராமு மணிவண்ணன் 976 பக்கங்களைக் கொண்ட மிகப் பெரிய நூலை தனது சொந்த பணத்தில் எட்டரை லட்சம் ரூபா செலவு செய்து வெளியிட்டு உள்ளார். அவர் பல சிரமங்களுக்கு மத்தியில் இந்நூலை எழுதியுள்ளார். இந்நூலின் மூலம் எம்மினத்துக்கு இளைக்கப்பட்ட கொடுமைகளை ஆவணப்படுத்தி உள்ளார்.



அதற்காக நாம் அவருக்கு என்றென்றும் கடமைப் பட்டுள்ளோம். இந்நூல் வெளியீட்டு விழாவில் அவரும் கலந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நாம் ஆறு மாதங்கள் காத்திருந்தோம். ஆயுத போராட்டத்தின் போது ஒதுங்கி இருந்தோர் தற்போது எமக்கு முற்று முழுதாக தோள் கொடுத்து வருகின்றனர். இந்திய மக்களது துணை எமக்குத் தேவை. இந்தியத் தமிழர்கள்,ஈழத் தமிழர்கள், புலம் பெயர்ந்த தமிழர்கள் ஆகியோர் முக்கோணமாக இணைந்து போராட வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டார்.

பேராசிரியர் ராமு மணிவண்ணனுக்கு பொன்னாடை போர்த்து கௌரவித்த திரு.ஈழவேந்தன் உரையாற்றிய போது "உலகில் அறிஞர்கள் அதிகம் ஆனால் அறிவுடமை, துணிவு கொண்டோர் சிலரே ஆவர். அந்த வகையில் துணிச்சல் மிக்கவரான எனது நண்பர் பேராசிரியர் ராமு மணிவண்ணன் அவர்கள் ஈழத் தமிழர்களுக்கு உதவும் வகையில் 976 பக்கங்களைக் கொண்ட இந்நூலின் மூலம் ஸ்ரீலங்காவில் இடம் பெற்றது இனப் படுகொலை தான்" Not war crime Not the crime against Tamils It's Genocide" என வலியுறுத்தி உள்ளார் என்று கூறினார்

கால் நூற்றாண்டு காலம் மனித உரிமைகளுக்காகவும் விடுதலைப் போராட்ட நடவடிக்கைகளிலும் ஈடு பட்டதனால் சிறை வைக்கப்பட்டு பின்னர் சிறையிலிருந்து தப்பி வந்தவரான திரு.அன்ரன் பிலிப் உரையாற்றிய போது "பேராசிரியர் ராமு மணிவண்ணன் அவர்கள் தமிழ் நாட்டு பல்கலைக் கழகத்தின் ஊடாக இந்நூலை வெளிக் கொண்டு வந்துள்ளமை பாராட்டுக்குரியது.

மக்களின் சுதந்திரத்துக்கு உலகத்தின் மனச்சாட்சிக்கு கொள்கைகளை வகுப்போருக்கு இந்நூல் மிக உறுதுணையாக இருக்கும். அத்துடன் ஐ.நா.மனித உரிமை ஆணையக அறிக்கை தயாரிப்பதற்கும் இந்நூல் சிறந்த ஆவணமாகும்" எனக் கூறினார்.

நாடு கடந்த தமிழீழ அரசின் அமைச்சரான திருமதி உஷா ஸ்ரீஸ்கந்தராசா உரையாற்றிய போது "ஸ்ரீலங்கா மூடி மறைக்க முயன்ற இனப் படுகொலை சம்பந்தமான உண்மைகளை இந்நூலின் மூலம் பேராசிரியர் ராமு மணிவண்ணன் அவர்கள் ஆதாரங்களுடன் வெளிக் கொணர்ந்துள்ளார். ஸ்ரீலங்காவில் நிலவி வந்த இனப் பிரச்சினைக்கு ,ராணுவ ரீதியிலான தீர்வே சரியெனக் கூறிக் கொண்டு அரசு திட்டமிட்டு இனப் படுகொலையை மேற்கொண்டது. எமது சமூகத்தின் விடிவிற்காக நாமனைவரும் உழைக்க வேண்டும் என்பதனை வலியுறுத்தி வரும் பேராசிரியர் ராமு மணிவண்ணன் தமிழ் பிள்ளைகளின் கல்வி வளற்சிக்காக தனது சொந்தப் பணத்தில் பாடசாலைகள் பலவற்றை நிறுவியுள்ளார். அதே போன்று இந்நூலை தனது சொந்தப் பணம் எட்டரை லட்சம் ரூபாவைக் கொடுத்து வெளியிட்டுள்ளார். நாடு கடந்த தமிழீழ அரசின் சார்பில் அவரது நூலை வெளியிட்டு வைப்பதில் நாம் பெருமை அடைகின்றோம்" எனக் கூறினார்.

மற்றும் பேராசிரியர் ஜோசெப் சந்திரகாந்தன், நாடு கடந்த தமிழீழ அரசின் அமைச்சர் திரு.விமல் விநாயகமூர்த்தி, டேவிட் பூபாலபிள்ளை, மார்க்கம் மாநகர பிரதேச சபை உறுப்பினர் திருமதி நிர்மலா ஆம்ஸ்றோங் ஆகியோரும் உரையாற்றினார்கள்.

அறுபது .டொலர்கள் பெறுமதியான நூலின் முதற் பிரதியை சட்டத்தரணி ஸ்ரீதரன் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து மற்றும் பலரும் நூலினை வாங்கினார்கள்.

**–வீரகேசரி மூர்த்தி**




றொரன்ரோ அல்பியன் பதியில் கோவில் கொண்டிருக்கும்

**கனடா . அருள்மிகு**

**ஸ்ரீ முத்துமாரி அம்மன் ஆலயம்**

***1771 Albion Rd., Unit #1, Toronto, ON. M9W 5S7***

***(Albion & HWY 27) Tel: 416-213-0110***

***www.shrimuththumaari.com***

ஆலயம் திறந்திருக்கும் நேரம்
காலை 9:00 மணி முதல் 1:00 மணி வரை
மாலை 5:00 மணி முதல் 9:00 மணி வரை

பூசை நேரம்
பகல 12:00 மணி, மாலை 7:30 மணி
*வெள்ளிக்கிழமை மாலை 7.30 மணி*

**06 டிசம்பர் 2014 முதல் 26 டிசம்பர் 2014 வரை பிள்ளையார் பெருங்கதை**

06 டிசம்பர் 2014 முதல் பிள்ளையார் பெருங்கதை தினமும் நடைபெறுகின்றது. உபயம் செய்ய விரும்பும் அடியார்கள் ஆலயத்துடன் தொடரபு கொள்ளவும்.

**26.12.2014 முதல் 04.01.2015 வரை**

திருவெம்பாவை விரதம் தினமும் காலை நடைபெறும்.
உபயம் செய்ய விரும்பும் அடியார்கள் ஆலயத்துடன் தொடரபு கொள்ளவும்.

**ஐயப்பன் மகர மண்டல விரதமும் மாலை அணிதலும்**

16 நவம்பர் 2014 ஞாயிற்றுக்கிழமை ஐயப்பப் பெருமானின் மகர மண்டலப் பூசையும் அடியார்களுக்கு மாலை அணிதலும் நடைபெற்று விரத நாட்களில் மாலை விசேட பூசைகள் நடைபெறுகின்றது.

குறிப்பு:- ஐயப்ப விரதநாட்களில் படிப்பூசை செய்ய விரும்பும் அடியார்கள் ஆலயக் காரியாலயத்துடன் தொடர்பு கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

- ஆலய அறங்காவலர் சபையினர்.




Choose Your Own Mortgage Features & Rate.
It's That Simple!

உங்கள் வீட்டுக்கடன்
வீட்டிற்கு மீதான மீள் கடன்
(Refinance) தேவைகளுக்கு
12 ஆண்டு அனுபவம்
தரமான ஆலோசனை
நம்பிக்கையான செயற்பாடு
துரிதமான சேவை
இவை அனைத்தையும்
ஒருங்கே பெற்றுக் கொள்ள
அழையுங்கள்
றோசன் விக்னராஜா



Roshan Wignarajah, AMP
Mortgage Broker

416-716-5946
1-877-366-3487

rwignarajah@mortgagealliance.com
mortgagealliance.com/RoshanWignarajah




Corp. Office: Suite 200, 2005 Sheppard Ave. E., Toronto ON M2J 5B4
Toll Free: 1-877-366-3487 License #10530

Purchases | Investments | Renewals | Self-Employed

# பத்திரகாளி சோதிட நிலையம்

# BADRAKALLI ASTROLOGY CENTER



## Pandit Sri Hanuman

Kerala (Choddankiri)

# 416.846.2798

## 100% Guaranteed Result



The Pandith can read the Past, Present & Future by Hand prediction, name, date of birth relating to love, education, marriage, money. I will help in all problems and work with god and holy spirit. Are you suffering in silence and nobody knows your pain or sorrow, but you and god know. Well you are not alone, the holy spirit will guide you tome and convince you. I will remove and destroy all bad, witchcraft, jealously and black magic permanently with superior strength & holy given power to protect to you and your family from evil things.

கேரளாவிலிருந்து வருகை தந்துள்ள பிரபல ஜோதிட வல்லுனர் பண்டித் **Pandit Sri Hanuman** சாஸ்திரிகள் பல இடங்களுக்குச் சென்று தற்போது கனடா வந்துள்ளார். இவர் கைரேகை, ஜாதகம், முகநாடி ஆகியவை கொண்டு மிகத்துல்லியமாக நடந்தவை, நடக்கவிருப்பவை பற்றிய விபரங்களைக் கூறுவார். இவற்றையெல்லாம் அறிந்து பரிகாரம் செய்து கொள்ள ஒருமுறை இவரைச் சந்தியுங்கள்.
கண்ணூறு, நாவூறுக்கு வெள்ளிக்கிழமை இலவசமாக நூல் கட்டப்படும்.

- கைரேகை
- நாம நட்சத்திரம்
- கல்வி, உத்தியோகம்
- தொழில், வியாபாரம்
- இலட்சுமி வசீகரம்
- வதிவிடப் பிரச்சனைகள்
- வெளிநாட்டுப் பயணங்கள்
- நீதிமன்ற வழக்குகள்
- பெண் பிள்ளைகள் – பெற்றார் பிரச்சனைகள்
- திருமணயோகம்
- குழந்தை பாக்கியம்
- கணவன் – மனைவி ஒற்றுமையின்மை
- எதிரிகள் கண்ணூறு, நாவூறு
- சர்ப்பதோஷம்
- கர்ப்பதோஷம்
- கஷ்ட – நஷ்டங்கள்
- வாகனப் பொருத்தம்
- ஒன்றுகூடுதல்

- **Business Investments**
- **Jealousy**
- **Childless Couples**
- **Depression**
- **Worries About Loved Ones**
- **Enemy Problems**
- **Money Problems**
- **Sexual Problems**
- **Love Problems**
- **House Protection**
- **Work Problems**
- **Money Blessing**
- **Family Arguments**
- **Drinking Problems**

பிளெக் மெஜிக் அகற்றி பாதுகாப்புக் கொடுக்கப்படும்.

**5215 Finch Ave. East, Unit #257, Upstairs, Scarborough ON M1S 0C2**

**GTA Square Mall (2nd Floor) (Middlefield & Finch)**




## $719,900
9th Line/Reeves Way Blvd
4 Bdr., 3 washrm




## $249,000
HWY400 / HWY88
3+2 Bdr., 2 Washrm , Finshed bsmt




## $439,900
8th Line/Lowes Gate/Bannerman
3+1 Bdr., 3 Washrm , Finshed bsmt




## $449,00
MIDLAND & EGLINTON




## $549,800
Brimley & Lawrence
3+1 Bdr., 2 washrm
bsmt: Apartment / Sep Entranc




## $589,900
Hwy 427/Rexdale
4 Bdr., 4 washrm
bsmt: Apartment / Sep Entranc




## $599,000
Keele /Major Mackenzie
4 Bdr., 3 washrm




## $629,000
HWY50 / HWY7
3+1 Bdr., 4 washrm
bsmt: Apartment / Sep Entranc




## $599,900
Derry & Tenth Line
4+1 Bdr., 3 washrm




## $659,988
Hwy 50/ Cottrell
4 Bdr., 3 washrm
bsmt: Sep Entrance / W/O




## $462,900
Bramalea Rd/Sandalwood Pkwy
4+1 Bdr., 4 washrm, Twnhouse
Finshed bsmt




## $769,900
Goreway & Castlemore
4 Bdr., 4 Washr


# Ganesh Thangarajah
Real Estate Broker

**416-994-9046**
**416-298-3200**


TOP 5% in CANADA






## HomeLife Today Realty Ltd., Brokerage*
31 Progress Ave., Suite 210, Toronto, ON M1P 4S6

*independently owned and operated. Defiantly intended to solicit homeowners, not those currently listed home owners

மனம் பூரிக்க மங்களகரமான மனையை தேர்ந்தெடுங்கள்

வீடு
வாங்க...
விற்க...

HomeLife
HomeLife/Today Realty Ltd
31 Progress Ave, Suite 210, Toronto

Ravi. Paramu
Broker
Cell: 416 262 4176
Bus: 416 298 3200

RANJANI THIRUKESWARAN LAW OFFICE



- Real Estate: வீடு, காணி கொள்வனவு விற்பனைச் சட்டம்
- Business Law: வியாபார, வர்த்தகச் சட்டம்
- Immigration Law: குடிவரவு, அகதிச் சட்டம்
- Family Law: குடும்ப வழக்குகள்
- Last Wills: உயில் தயாரித்தல்
- Power of Attorney: தத்துவப் பத்திரம் தயாரித்தல்

3850 Finch Ave East
Suite 202
Scarborough -ON- M1T 3T6
(Kennedy/ Finch)
416 291 2242



Ranjani Thirukeswaran
(Barrister & Solicitor)

RE/MAX®
Vision Realty Inc.,
416.894.9122 | soldhouse.ca
கிருபா
தனபாலசிங்கம்

கனவு இல்லம்
உங்கள் கைகளில்!
Ravi Veerasingam B.A
Sales Representative
416-356-8958
HomeLife/Future
Realty Inc. Brokerage*
905-201-9977

தமிழரின் நிர்வாகத்தில்

எமது நிலையத்திலே கண் பரிசோதிக்கப்படும்

Nilax optical

☑ Designer eye glasses
☑ safety eye glasses
☑ contact lenses
☑ Designer sun glasses

Limited time Offer

**$50 Eye exam**
with purchase of complete glass (Reg. $70.00)
First 10 Custermers only (Per Doctor Visit)

**FREE Eye exam**
with purchase of complete glass
Over $349.00

**BUY ONE GET ONE FREE**

(416) 298- 2111
(KENNEDY/FINCH)
3852 FINCH AVE EAST
UNIT # G04 TORONTO, ON M1T 3T9

S.V.Latha
Optician

Sri Ganesh
Manager

LIFE INSURANCE & RESP
மருத்துவ பரிசோதனையற்ற காப்புறுதி
Non Medical Insurance - up to age 85

ARUN KULASINGAM
INSURANCE ADVISOR
416-400-0041
kulasingam33@yahoo.ca

KABIS
KABIS & ASSOCIATES INC.
3033 Palstan Road Suite # 210
Mississauga, ON. L4Y 4E7

- Life Insurance
- Critical Illness
- Disability
- Travel Insurance (Super Visa)
- RESP
- RRSP

Foresters | IA INDUSTRIAL ALLIANCE | Assumption Life

Home & Auto Insurance
உங்கள் வீடு மற்றும் வாகன காப்புறுதி தேவைகளுக்கு என்னை அழையுங்கள்
சுரேன் நவரத்தினராஜா
416.520.6916
Suren Navaratnarajah
Email: snavaratnarajah@allstate.ca
Scarborough East Agency
Allstate
You're in good hands.
4525 Kingston Road,



வரிசையாக 5 வருடங்கள்

GLOBAL100
எட்டாவது முறையாக, உலக அளவில் மிகுந்த நிலைத்தன்மை கொண்ட 100 உலகளாவிய நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது!

நம்பிக்கையானது. நிலைத்து இருக்கக்கூடியது.
கனடாவின் மிகவும் நம்பிக்கையான ஆயுள் காப்பீட்டு பிராண்ட்

## ஏறத்தாழ 150 வருடங்களாக கனடா மக்களின் நிதி தொடர்பான எதிர்காலத்திற்கு ஆற்றல் அளிக்கும் நிறுவனமாக நம்பப்படுகிறது.

ஒரு சன் லை:.ப் நிறுவன நிதிஆலோசகராக, கனடாவின் முன்னணி நிதிச் சேவை நிறுவனங்களின் ஓர் அங்கமாக இருப்பதில் நான் பெருமையடைகிறேன். ஏறத்தாழ 150 வருடங்களாக சன் லை:.ப் பைனான்சியல் நிறுவனம் கனடாவின் ஓர் அங்மாகவே இருந்து வந்துள்ளது. வாழ்நாள் முழுவதும் நிதிசார்ந்த பாதுகாப்பை அடைவதில் உதவியைப் பெறும் பொருட்டு லட்சக்கணக்கான கனடா மக்கள் எங்களை நாடுகின்ற அளவுக்கு அவர்களின் நம்பிக்கையை நாங்கள் பெற்றுள்ளோம்.

™TRUSTED BRAND என்பது ரீடர்ஸ் டைஜெஸ்ட் அசோசியேஷன் கனடா யூ.எல்.சி சங்கத்தின் வணிகச் சின்னம் ஆகும். பரஸ்பர நிதிகளை சன் லைஃப் ஃபினான்சியல் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் சர்வீசஸ் (கனடா) ஐ.என்.சி நிறுவனம் வழங்குகிறது.

சன் லைஃப் அசூரன்ஸ் கம்பெனி ஆஃப் கனடா நிறுவனம் சன் லைஃப் ஃபினான்சியல் நிறுவனக் குழுமங்களின் ஓர் அங்கமாகும்.

© சன் லைஃப் அசூரன்ஸ் கம்பெனி ஆஃப் கனடா 2014

இந்த நம்பிக்கையின் மீது தான் நாங்கள் எங்களுடைய நற்பெயரைப் பணையம் வைத்துள்ளோம். இதுவே உள்நாட்டிலும், உலக அளவிலும் நாங்கள் மேற்கொண்டு வரும் வணிகம் குறித்த அனைத்தையும் வரையறுக்கின்றது. இந்த நம்பிக்கைக்கு உள்நாட்டில் ரீடர்ஸ் டைஜஸ்ட் 2014இல், தொடர்ந்து ஐந்தாவது வருடமாக நம்பிக்கையான பிராண்ட் என்ற அங்கீகாரம் வழங்கப்பட்டுள்ளது. நாங்கள் உலகளவில் மிகவும் நிலைத்தன்மை கொண்ட 100 உலகளாவிய நிறுவனங்களில் ஒன்றாக இருப்பதால் எங்கள் நிறுவனம் உலக அளவிலும் அங்கீகாரம் பெற்றுள்ளது.

ஒரு சன் லை:.ப் நிறுவன நிதி ஆலோசகராக நான் என்னுடைய தனிப்பட்ட நற்பெயரையும் இந்த நம்பிக்கையின் மீதுதான் பணையம் வைத்துள்ளேன். உங்களுடைய கனவுகள், குறிக்கோள்கள் மற்றும் நிதி நிலைமை ஆகியவற்றுக்குப் பொருத்தமான ஒரு தனிப்பட்ட தீர்வை அளிக்க உங்களுடைய குறிப்பிட்டத் தேவைகளை நான் செவிமடுத்துக் கேட்பேன். உங்களுடைய நம்பிக்கையைப் பெறுவதும், உங்களுடைய நிதிசார்ந்த எதிர்காலத்திற்கு தகுந்த நடவடிக்கைகளை நீங்கள் மேற்கொள்வதற்கான ஆற்றலை அளிப்பதுமே என்னுடைய குறிக்கோள்களாக இருக்கின்றன.

என்னால் பின்வருவனவற்றில் உங்களுக்கு உதவி செய்ய முடியும்:

- ஆயுள் காப்பீடு மற்றும் உடல்நலக் காப்பீடு
- ஊழியருக்கான நன்மைகள்
- பரஸ்பர நிதிகள்
- கடுமையான உடல்நலக் குறைவுக்கான காப்பீடு
- இயலாமைக்கான காப்பீடு



அஜித் சபாரத்தினம்*, CHS
அஜித் சபாரத்தினம் காப்பீடு மற்றும் முதலீட்டுச் சேவைகள்
தொலைபேசி: 416-439-2800
அலைபேசி: 647-401-5800
ajith.sabaratnam@sunlife.com
www.sunlife.ca/ajith.sabaratnam

Sun Life Financial
Life's brighter under the sun